# முக்தி தரும்
# செந்தமிழாகம சிவபூசை



குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்தபொற் பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மானிலத்தே

**தெய்வத் திருமதி.சிவநேசரத்தினம் குணரத்தினம்**
**நினைவு வெளியீடு**

# நகுலேச்சுவரம்
# (ஈழத்துக் காசி – கீரிமலை)



ஆர் அறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
ஆர் அறிவார் இந்த அகலமும் நீளமும்
பேர் அறியாத பெரும் சுடர் ஒன்றதின்
வேர் அறியாமை விளம்பு கின்றேனே – திருமந்திரம்

உ
சிவமயம்

# முக்தி தரும் செந்தமிழாகம சிவபூசை



*தெய்வத் திருமதி.சிவநேசரத்தினம் குணரத்தினம்*

**அவர்களின் மறைவு குறித்து, அவரது ஞாபகார்த்தமாக சைவத் தமிழையும், சிவ வழிபாட்டினையும் யாவர்க்கும் கிடைக்கும் வண்ணம் செய்தற் பொருட்டு அவரது கும்பத்தினரால் 16.05.2019 அன்று வெளியிடப்பட்டது.**

# நூல் விபரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | முக்திதரும் செந்தமிழாகம சிவபூசை |
| மொழி | : | சைவத்தமிழ் |
| வகை | : | ஆன்மீகம் |
| பதிப்பு ஆண்டு | : | 2019 |
| சிவபூசை நெறி | : | மு.பெ.சக்திவேல் முருகன் B.E., M.A M.Phil D.D கிருபானந்த வாரியாரின் பேரன் எழுதிய செந்தமிழாகம சிவபூசை செய்வது எப்படி |
| தேவார உரைகள் | : | தருமை அதீன திருமுறைத் தொகுப்பு |
| வெளியீடு | : | சைவ மாணவர் சபை, இலங்கை |
| நூல் விலை | : | சிவனடியார்களுக்கு இலவசம் |
| அச்சுப்பதிப்பு | : | மதிகலர்ஸ், நல்லூர், யாழ்ப்பாணம் |
| தொடர்புகள் | : | குணரத்தினம் பார்த்தீபன் (parthy@outlook.com) |
| இணையம் | : | www.sivaneyam.com |
| தொடர்புடைய நூல்கள் | : | தந்தையார் அமரர். ஆறுமுகம் சிவசம்பு குணரத்தினம் நினைவு வெளியீடு - இந்துக்களின் சடங்குகள், சகோதரர் அமரர். குணரத்தினம் சுகந்தீபன் நினைவு வெளியீடு - அறுபடை கந்த சஷ்டி கவசம் மற்றும் தாயாரின் பவள விழா மலர் - அம்மம்மாவின் கதை (இரண்டு வெளியீடுகள் 3 நவ 2018 ஆஸ்திரேலியா மற்றும் 16 மே 2019 இலங்கை) |

உ
சிவமயம்

# தெய்வத்திருமதி சிவநேசரத்தினம் குணரத்தினம்

(இளைப்பாறிய பிரதி அதிபர் - கொக்குவில் இந்து கல்லூரி)



மண்ணை வளர்க்க
1 நவ 1943

விண்ணை வளர்க்க
16 ஏப்ரல் 2019

## திதி வெண்பா

திருமிகு விகாரி சீர்பெறு சித்திரைத் திங்கள்
உருவிலான் துவாதசி பூரத்தே - பூவிட்டு
அருள் நிறை சிவநேசரத்தினம் பற்றறுத்து
ஆடல்வல்லான் அடி சேர்ந்தநாள்.



## அன்னையும் பிதாவும் - முன்னறி தெய்வம்

1 நவம்பர் - இல் பிறந்தநாளைக் கொண்டாடும்
நாட்டுப்பற்றாளர் அமரர் ஆ. சி. குணரட்ணம் - திருமதி. சிவநேசரத்தினம்

உயிருக்கு மெய்கொடுத்து
உருவாக்கினாள் அம்மா
கருவுக்கு இடம் கொடுத்து
காப்பாற்றினாள் அம்மா
உடலுக்கு வலிகொடுத்து
புறந்தள்ளிய தாயே - என்
உருவிற்கு பெயர் கொடுத்து
நிலையாக்கினாய் நீயே

**திருமதி. சிவநேசரத்தினம் குணரட்ணம்**

(ஓய்வுநிலை பிரதி அதிபர் - கொக்குவில் இந்து கல்லூரி
முன்னாள் சாரணிய யாழ் மாவட்ட ஆணையாளர்)




# அணிந்துரை

திரு.பார்த்தீபன் அவர்கள் முதன் முறையாக என்னுடன் தொலை பேசியில் தொடர்பு கொண்டு தன்னை அறிமுகம் செய்து கொண்டார். அவருடைய தாயார் ஓய்வு பெற்ற கொக்குவில் இந்துக் கல்லூரி பிரதி அதிபர் என்றும் அவர் 16.04.2019 அன்று இறையடியின் இன்னிழலை அடைந்தார் என்றும், அதன் தொடர்பாக 16.05.2019 அன்னையாருக்கு உரிய சடங்கு செய்ய இருப்பதாகவும், அதன்போது நினைவு மலர் ஒன்று வெளியிட எண்ணியுள்ளதாகவும் அதில் அடியேன் எழுதிய ”செந்தமிழ் சிவகாம பூசை செய்வது எப்படி” என்ற நூலின் ஒரு பகுதியை சேர்க்க அனுமதி கேட்பதாகவும் கூறினார். இதையே மின்னஞ்சலிலும் வேண்டி இருந்தார்.

அம்மையாரின் பெயர் தெய்வத்திருமதி சிவநேசரத்தினம் குணரத்தினம் என்பதறிந்தேன். சிவநேயம் மிக்க ஒரு தூய ஆன்மாவின் நினைவு மலர் செந்தமிழ் சிவாகம பூசை செய்முறை நூலோடு இணைந்து வருவது மிகப்பொருத்தமே.

அண்மையில் தான் ”இறப்பு- விஞ்ஞானம்- இனிய சைவ சித்தாந்தம்” என்ற ஒரு நூலை (200 பக்க அளவில்) எழுதி முடித்துள் ளேன். அது விரைவில் அச்சுப்பிரதியாக வெளிவர இருக்கின்றது. இந்த நேரத்தில் இப்படி ஒரு நினைவு மலர் வெளியீடு பற்றி வேண்டு கோள் வந்திருப்பது இறைதிருவருளே அது எனக்குள் சில நினை வலைகளை எழுப்புகிறது.

வெர்ஜீனியா பல்கலைக்கழக டாக்டர்கள் இறப்புப்பற்றி விஞ்ஞான ரீதியான ஆய்வுகள் நடத்தி பல நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றில் டாக்டர் ரேமென்ட் மூடி (Raymond Moody) என்பவரின் “Life after Life”

என்ற நூல் புகழ்பெற்ற நூலாகும். அந்த நூல் கூறும் முடிவுகளில் சில வருமாறு

(1) உயிர் உடற்சிறையை விட்டு வெளியேறினாலே அமைதியும் ஆனந்தமும் அடையும்

(2) உடற்சிறை காரணமாக உயிரின் ஐம்புல உணர்வுகள் கட்டுண்டு சிற்றளவில் இருப்பதற்கு நேர் எதிராக இறந்த பின் பெறும் ஆவியுடல் (சைவ சித்தாந்த ரீதியாக புரியட்டக உடல்) தன்னில் ஐம்புல உணர் வுகள் எல்லையற்ற தன்மைத்தாகிவிடும். எனவே பார்வை, கேட்டல், தொடுதல் உணர்வு, சுவையுணர்வு மற்றும் முகர்தல் உணர்வு ஆகிய புலன் உணர்வுகள் மிகமிக்க கூர்மை பெற்று விடும். எனவே படித்தலுக்கும் கேட்டலுக்கும் நேரமே தேவைப் படாது.

(3) புரியட்டகவுடலுக்கு இடப்பெயர்ச்சி என்பது ஒரு பிரச்சினையே அன்று. நினைத்த நேரத்தில் நினைந்த இடத்தில் இருக்கும் வல்லமை தானாக அமையும். அந்தத்திறன் ஆவியுடலின் எடை யற்ற தன்மையால் சாத்தியமாகும்

மேற்கூறிய அத்தனையும் ஓய்வு பெற்ற கொக்குவில் இந்துக் கல்லூரி பிரதி அதிபர் தெயவத்திருமதி சிவநேசரத்தினம் குணரத்தினம் என்ற ஆன்மாவிற்கும் அமைந்திருக்கும்.

எனவே அந்த ஆன்மா அவரது குடும்பத்தினர் அவர் பொருட்டு அன்புடன் செய்யும் சடங்கில், 16-05-2019ல் காட்டும் அன்பின் அளவில் அங்கே நின்று ஏற்கும். அங்கே வெளியிடப்படும் முக்திதரும் செந்தமிழா கம சிவபூசை நினைவு மலரையும் முழுமையாகப் படிக்கும். அந்நிலையில் ஆன்மாக்களுக்கு அபார நினைவாற்றல் இருக்கும் என்பதால் அம்மை யார்க்கு இன்னதென்று விளக்கலாக பயன் கிட்டும் என்பதில் ஐயமே இல்லை.

குறிப்பாக, தமிழ் தெய்வத்தன்மை உடையது' தமிழாகமம் இறைவன் கால்களின் கீழ் இருந்து உலகோர்க்கு உணர்த்த

எனவே தமிழாகமத்தை,

**"மன்று மாமலை மகேந்திரமதனில்**
**சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்"**

என்று மணிவாசகர் பாடி உறுதி செய்துள்ளார். ஆகவே இத்தமிழ் ஆகமத்தில் செய்யும் சிவபூசையில் தோய்ந்து அம்மையார் வழுவின்றி வழிபாடு செய்தால் அம்மையார் மேற்பிறவி ஒன்றின் மறுபிறவி எடுத்தருளும் வகை தோன்றி இறைவனுடன் இரண்டறக் கலந்து பேரா இயற்கை பேரின்பத்தில் உள்ளமயிலேயே திளைப்பார் என்பது திண்ணம்.

இதற்கு வழிவகை செய்யும் திரு.பார்த்தீபன் அவர்கள் பண்பின் சிகரம் என்று கூறல் வேண்டும்.

சாற்றுகவி

**சிவநேச ரத்ன குணரத்தினம் சேரா**
**பவந்தீர்க்கும் பார்த்திபனார் வாழி – சிவபூசை**
**செந்தமிழில் செய்தோங்கி சிந்தனைக்கும் எட்டாத**
**விந்தையருள் பெற்றெவரும் வாழி !**

அன்பன்

6/5/19.

உ
சிவமயம்

# சிவபூசையும் உடற்சுத்தியும்

**ஐந்து கரத்தனை யானை முகத்தனை**
**இந்தி னிளம்பிறை போலும் எயிற்றனை**
**நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்**
**புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.**

ஐந்து கைகளையும், யானை முகத்தையும், சந்திரனது இளமை நிலையாகிய பிறைபோலும் தந்தத்தையும் உடையவரும், சிவபிரானுக்குப் புதல்வரும், ஞானத்தின் முடி நிலையாய் உள்ளவரும் ஆகிய விநாயகப் பெருமானை உள்ளத்தில் வைத்து, அவரது திருவடிகளைத் துதிக்கின்றேன்.

எமது சமயத்தின் முழுமுதற் கடவுளாகிய, எங்கும் நீக்கமற நிறைந்து எல்லாவற்றிக்கும் காரணமாய் உலகை இயங்கிக்கொண்டிருக்கும் பரம்பொருளாம் பரமசிவனை நாம் தினமும் நினைப்பது மட்டுமல்லாமல் வழிபடவும் வேண்டும். சிவன் என்றால் அழித்தல் தொழிலை செய்பவர் என்று பயத்தினை உருவாக்கி சிவத்தினை அனுபவிக்கவிடாது உங்களை மறைத்துவிட்டார்கள் சிலர். வடநாட்டில் சிவபெரு மனாகிய பரம்பொருள் தென்னாட்டில் பரமசிவன் மற்றும் நடராசராக மாறியுள்ளார். இதனையே "தென்னாடுடைய சிவனே போற்றி என்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்று முழங்கியுள்ளார்கள். ஐந்தொழிலாகிய படைத்தல், காத்தல், அழித்தல் (ஒடுக்குதல்), அருளல், மறைத்தல் இவற்றில் அழித்திலை மட்டுமல்ல அருளலும் புரிகின்றார் அந்தப் பரமசிவன். இதன் தத்துவம் தான் நடராச வடிவம். ஆகவே சிவன் என்றால் பயம் என்ற, தான் பெற்ற இன்பத்தினை இவ்வையகத்தினை பெறவிடாத மாந்தரின் அனுபவமற்ற கதைகளை விடுத்து சிவத்தினை நிறுவி சிவத்தினை வழிபட அனைவரும் முன்வரவேண்டும்.

**சிவனோடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை**
**அவனோடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை**
**புவனம் கடந்தன்று பொன்னொளி மின்னும்**
**தவனச் சடைமுடி தாமரையானே** – திருமந்திரம் 40

தேவர்களிலும் மனிதர்களிலும் சிவனிற்கு நிகரானவர்கள் இல்லை. ஆதலினால் இயல்பாகவே உலகைக் கடந்து நின்று ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெரும் சோதியாய் உணர்வுகதிரவனாய் அதாவது ஞானசூரியனாய், தவங்களின் பயனாய், தாவுகின்ற மானை ஏந்தியவனாய் இருக்கும் பரம்பொருள் அந்த பரம சிவனே.

**யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே**
**மாதொரு பாகனார்தாம் வருவர்** – சிவஞான சித்தியார்

இப்படியான சிவத்தினை நினைக்காமலும் வழிபடாமலும் இருப்பது, இருந்தும் இல்லாதது போன்றது. ஆகவே நாங்கள் தினமும் சிவநாமம் உச்சரித்து சிவவழிபாடு செய்து இப்பிறப்பின் பிறவிப்பலன்களை அடைவோமாக.

## சிவபூசையும் உடல் சுத்திகரிப்பும்

எமது கருவாக்கம் மூன்று பகுதிகளை கொண்டது. தூல உடம்பு (தனு அல்லது தேகம்), சூக்கும உடம்பு (மனம் முதலாய அகக் கருவிகள்) மற்றும் காரண உடம்பு.(சித்தம்) நாம் தாய் தந்தையிடம் இருந்து பெற்றுக்கொண்டது தூல உடம்பு. இது அழியக்கூடியது. ஆத்மா ஏகம் என்பதால் எல்லா உயிரினங்களிலும் இருக்கும் ஆத்மா ஒரே மாதிரி ஆனது. தூல உடம்பிடிற்கு பெற்றோர் தான் தாய்தந்தையர். சூக்கும உடம்பிடிற்கு தாய்தந்தையர் இறைவன் (சிவன் பார்வதி), அதனால் தான் திருஞானசம்பந்தர் அம்மையே அப்பா ஒப்பிலா மணியே அன்பினில் விளைந்த ஆரமுதே எனப் பாடினார்.

**தூல உடல் கருவிகள் பதினைந்து.** அவையாவன மெய் (தோல்), வாய் (நாக்கு), கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து ஞானேந்திரியங்கள், வாய், கை, கால், குதம், குறி ஆகிய ஐந்து கர்மேந்திரியங்கள், பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் ஆகிய பஞ்ச பிராணன்கள் (வாயுக்கள்). இவை வெளியுலகம் குறித்த செயற்பாடுகள், அனுபவங்கள், பொருட்கள், உணர்வுகள் போன்றவற்றை உள்ளே எடுத்துச்செல்ல பயன்படும் கருவிகள்.

ஞானேந்திரியங்கள் என்றால் வெளி உலக பொருட்களைக் குறித்த அறிவை நமக்கு தரும் உடல் உறுப்புகள் ஆகும். அதுபோல் கர்மேந்திரியங்கள் என்றால் வாக்கு, கைகள், கால்கள், உடற்கழிவுகளை வெளியே தள்ளும் உறுப்புகள் (குதம் மற்றும் சிறுநீர் உறுப்பு), மற்றும் பிறப்புறுப்புக்கள் ஆகிய ஐந்தும் கர்மேந்திரியங்கள் ஆகும்.

**சூக்கும உடம்பின் கருவிகள் எட்டு.** இதனால் தான் இதனை புரியட்டகாயம்/ அட்ட காயம் என அழைப்பார்கள். அவையாவன மனம் , புத்தி , அகங்காரம், சுவை, ஒளி , ஊறு, ஓசை மற்றும் நாற்றம் ஆகிய ஐம்புலன்கள். உதாரணமாக தூல உடல் கண்வழியாக கண்டதை சூக்கும உடம்பின் கருவியான ஒளி / பார்த்தல் என்ற செயற் பாட்டால் காரண உடம் பாகிய சித்தத்திடம் கொண்டு செல்கிறது. சித்தம் அதனை வகைப் படுத்தி உருவகித்து உணர்கிறது.

**மற்றது காரண உடம்பு.** இதை சித்தம் என்றும் சொல்லலாம். இது மற்றைய இரண்டு உடம்பையும் செலுத்த அதாவது இயக்கும் காரணமாக இயங்குகிறது. இங்குதான் புருடன் என்கிற ஆன்மா இருக்கிறது. இது அழியாதது. இதனால் தான் எமது சமயத்தில் மறுபிறப்பு பேசப்படுகிறது. சூக்கும உடலினை நீங்கள் கனவு காணும் போது காணலாம்.

**பேரானந்தம் / சிவானந்தம்** என்பது இந்த மூன்று உடல்களையும் தூய்மைப் படுத்து வது. இதனைத்தான் பலவிடங்களில் சிற்றின்பங்களை தவிர்த்து பேரின்பமாகிய சிவானந்தம் அடைதல் என்று ஞானிகள் கூறுகின்றனர். மாணிக்கவாசகர் திருவெம் பாவையில் "சித்தம் அழகியார் பாடாரோ நம்சிவனை" என்று குறிப்பிடுகிறார். அதாவது சித்தம் செம்மையுடையவர் நம் சிவனைப் பாடவேண்டும், நம் சிவனை பாடினால் சித்தம் அழகாகும். சித்தம் அழகாக சொல்லுங்கள் "சிவயசிவ".

## உடல் சுத்திகரிப்பு

**உடற்தூய்மைக்கான ஐந்தெழுத்து மந்திரம்**

**தூலத் தூய்மை மந்திரம் – நமசிவாய**

**சூக்குமத் தூய்மை மந்திரம் – சிவாயநம**

**காரணத் தூய்மை மந்திரம் – சிவயசிவ**

தூலத் தூய்மை – திருமுறைகள் ஓதல் – கேட்டல்

மூன்று வேறுவகையான உடம்புகளையும் மூன்று வழிகளால் சுத்தமாக் கலாம். தூல உடம்பினைச் சுத்தமாக்க மந்திரங்களும், சூக்கும உடம்பை சுத்தமாக்க தந்திரங்களும் அதாவது ஆகமச் சிறப்புக்களும் உதவும். மந்திரமாவது என்னவெனில் எமது பன்னிரு திருமுறைகள் ஆகும். திருமுறைகளை ஓதுதல் அல்லது ஓதுவதை கேட்டல் தூல




உடம்பினை சுத்திகரிக்கும் தூய்மையாக்கும். எமது அர்ச்சனை பாட்டேயாகும். திருமுறைகளை ஒலி வரும்படியாக உரக்க சொல்லவேண்டும்.

திருப்பிரமபுரம் – வழிமொழித் திருவிராகம் – சாதாரி (சம்பந்தர் தேவாரம்– 3525)

**ஒழுகலரி தழிகலியி லூழியுலகு பழிபெருகு வழியைநினையா**
**முழுதுடலி லெழுமயிர்க டழுவுமுனி குழுவினொடு கெழுவுசிவனைத்**
**தொழுதுலகி லிழுகுமல மழியும்வகை கழுவுமுரை கழுமலநகர்ப்**
**பழுதிலிறை யெழுதுமொழி தமிழ்விரகன் வழிமொழிகண் மொழிதகையவே.**

வருங்காலங்களில் நேரமின்மையால் தொலையப்போகும் உலகில், நல்லொழுக்கத்தில் நிற்றல் அரிதாகி அழிகின்ற கலிகாலத்தில், உலகில் பழிபெருகுதலை நினைத்து வருந்தி, உடல் முழுவதும் முடி முளைத்துள்ள முனிவர் தம் குழுவினருடன் அங்கு தங்கி, சிவபெருமானைத் தொழுது, உலக இச்சைக்கு (ஆசைகளுக்கு) இழுக்கின்ற மலங்கள் நீங்கிச் சிவஞான உபதேசம் பெற்றதால் கழுமலம் எனப் போற்றப்படும் திருத்தலத்தினை வணங்குவோரின் குற்றம், பாவங்கள்களை இல்லாமல் செய்கின்ற இறைவன் தமிழில் எழுதும் இந்த பதிகம் வல்லவனாகிய ஞானசம்பந்தர் வழியாக எமக்கு கிடைத்துள்ளன. இவற்றினை மட்டும் பாடினாலே அதிலே கூறப்பட்ட ஆலயங் களை தரிசித்தால் உடம்பு தூய்மையடையும். (திருப்பிரமபுரம் – வழிமொழித் திருவிராகம் 3514–3525 – பதிகம் அத்தியாயத்தின் கடைசியில் இணைக்கபட்டுள்ளது)

**தூலத் தூய்மை மந்திரம் – நமசிவாய (108) மற்றும் பஞ்சபுராணம் ஓதுக**

## சூக்குமத் தூய்மை – சிவபூசை

இது ஆகமசிறப்பான சிவபூசையாகும்.சிவபூசைகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவையாவன சிவலிங்க வழிபாடு, குரு வழிபாடு, சங்கம வழிபாடு. சிவலிங்க வழிபாடு என்பது சிவபூசை செய்து இறைவனை நேரடியா வழிபட்டு முக்தி அடைதல் அதாவது அவனருளாலே அவன் தாள் வணங்கி அவனை அடைதல், குரு வழிபாட்டு முறையில் ஒருவரைக் குருவாக ஏற்று அவரின் வழிகாட்டலில் இறைவனை அடைதல் மற்றது சங்கம வழிபாடு அதாவது அடியார்களை வணங்கி அவர்களை இறைவனாகப் பாவித்து வணங்கி அதனூடு சிவனை அடைதல்.

சூக்குமத் தூய்மை மந்திரம் – சிவாயநம

## சிவலிங்க வழிபாடு

சிவலிங்க வழிபாடு என்பது சிவபூசை செய்து இறைவனை நேரடியா வழிபட்டு முக்தி அடைதல் அதாவது அவனருளாலே அவன் தாள் வணங்கி அவனை அடைதல். இது கோவிலில் மட்டுமல்ல வீட்டிலும் சிவலிங்கம் வைத்து பூசை பண்ணுவதன் மூலம் பிறவிப் பெருங்கடலை நீந்தி முக்திபெறலாம். சிவலிங்கம் வைத்தது சிவபூசை புரிதல் ஒரு பெரும் சிவன் கோவில் அமைத்த பலன்களை கொடுக்கும்.

சிவ வழிபாட்டினை தமிழிலும் செய்யலாம் என்பதனை வழிபாட்டு முறைகளுடன் விளக்கும் நோக்குடன் இந்த மலர் வெளியிடப்படுகிறது. அதிலே விரிவாகப் பண்ணுதல், வேலைநிமித்தம் தினசரி ஒருபகுதியையாவது பண்ணுதல் என்பவற்றை கருத்திற் கொண்டு “செந்தமிழாகம சிவபூசை” மற்றும் ”தினசரி சிவபூசை” என இரண்டு பகுதிகளாக சிவபூசை விளக்கபட்டுள்ளது.

## குரு வழிபாடு

குரு வழிபாட்டு முறையில் ஒருவரைக் குருவாக ஏற்று அவரின் வழிகாட்டலில் இறைவனை அடைதல். இது வழிகாட்டல் தேவைப்படுபவர்களுக்கு உகந்த மார்க்கம்.

**தெளிவு குருவின் திருமேனி காணல்**
**தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்**
**தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்**
**தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே** – திருமந்திரம் 138

ஞானகுருவின் திருவுருவைச் சிவனின் அருள்மேனியாகக் காணுதல், அவரது திருப்பெயரைச் சிவனது சிவநாமமாக திருவைந்தெழுத்துக்கு ஒப்பதாகக் கொண்டு எப்பொழுதும் சொல்லுதல், அவரிடும் கட்டளைகளை மொழிகளைச் சிவனது ஆணை யாக போற்றி கேட்டல் மற்றும் அவரது திருவுருவத்தை உள்ளத்துள் வாங்குதல் இவைகளே உண்மையான ஞானத்தினை, ஞானசுத்தியினைத் தரும்.

## சங்கம வழிபாடு – மகேசுவரபூசை – அடியார் வழிபாடு

இது சிவனடியார்களை சிவனாகப் பாவித்து அவர்களை வணங்கி அவர்களுக்கு அன்னம் பாலித்து அதனூடாக முக்தி அடைவது. சிவனடியார்களை வீட்டுக்கு அழைத்து, அவர்களின் பாதம் கழுவி அமரவைத்து அர்ச்சனை புரிந்து, அறுசுவையுடன் நால்வகை உணவுகள் பரிமாறி பசியாறச்செய்தல் மகேஸ்வர பூசையாகும்.

**கொண்டு வந்து மனைப்பு குந்துகு**
**குலாவு பாதம்வி ளக்கியே**
**மண்டு காதலினாதனத்திடை**
**வைத்த ருச்சனை செய்தபின்**
**உண்டி நாலுவி தத்தி லாறு**
**சுவைத்தி றத்தினில் ஒப்பிலா**
**அண்டர் நாயகர் தொண்டரிச்சையில்**
**அமுது செய்யஅ ளித்துளார்**

– இளையான்குடிமாற நாயனார் புராணம்

சங்கம வழிபாடும் சிறந்தது என திருமூலர் திருமந்திரத்தில் பின்வருமாறு பாடியுள்ளார்.

**படமாடும் கோயில் பகவற்கு ஒன்று ஈயின்**
**நடமாடும் கோயில் நம்பர்க்கு ஆங்கு ஆகா**
**நடமாடும் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயில்**
**படமாடும் கோயில் பகவற்கு அது ஆகுமே** – திருமந்திரம் 1857

உலகில் இரு கோயில்கள் உண்டென்கிறார் திருமூலர். அவையாவன படமாடுகின்ற கோயில் மற்றது நடமாடும் கோயில். நடமாடும் கோயிலாவது உயிர்களைக் குறிக்கும். கடவுளைப் படமாக வைத்து வழிபட்டமையால் மற்றைய வகையைப் படமாடக் கோயில் என்றார்.

தலையிலே நாகம் படமாடும் கோவிலில் பகவானுக்கு கொடுத்தால் அது நடமாடும் உயிரினங்களுக்கு போகாது (அதற்காக அது பிழையென்று அவர் சொல்லவில்லை) ஆனால் நடமாடும் கோயிலான அடியவர்களுக்கோ அல்லது உயிரினங்களுக்கோ (பொதுவாக பசு போன்ற வாயில்லா சீவன்களுக்கு) கொடுத்தால் அது படமாடும் ஈசனுக்கு போய் சேரும் என்பதே பொருள். தானங்களில் சிறந்தது அன்னதானம். மாதத்தில் ஒருமுறையாவது அடியவர்களுக்கு அல்லது ஏழைகளுக்கு அன்னதானம் செய்வது சிவமுக்தியை தரும்.



**மகேசுவரபூசை – அடியார் வழிபாடு**

## தினசரி சிவபூசை

(1) **விபூதி அணிதல் –** நந்தி முத்திரையால் எடுக்கப்பட்ட விபூதியை இடது உள்ளங்கையில் 'சிவாயநம' என்று ஓதி வைக்க.(சூக்குமத் தூய்மை மந்திரம் – சிவாயநம). பின்னர் மூன்று விரல்களால் பரந்து எடுத்து நெற்றியிலே இடமிருந்து வலமாக முன்றுமுறை சிவாயநம உச்சரித்தபடி அணித்துக்கொள்க. பின்னர் திருநீற்று பதிகத்தினை பாடுக.

திருவாலவாய் – திருநீற்றுப்பதிகம் – காந்தாரம் (சம்பந்தர் தேவாரம் – 2178)

**மந்திரமாவது நீறு மானவர் மேலது நீறு**
**சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு**
**தந்திரமாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு**
**செய்துவர் வாயுமைப் பங்கன் திருஆலவாயான் திருநீறே**

(2) **உருத்திராட்சம் அணிதல் –** உருத்திராட்ச மாலை உள்ளவர்கள் அதனை தரித்துக் கொள்ளலாம். இல்லாதவர்கள் இதனை வாங்கி அணிதல் சாலச்சிறந்தது. குறைந்தது ஒரு காயைக் கொண்ட மாலையாவது அணிதல் சிறப்பு.

**(3) மூச்சுத் தூய்மை (பிராணாயாமம்)**

ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பகம் அறுபத்து நால் அதில்
ஊறுதல் முப்பத் திரண்ட திரேசகம்
மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே. – திருமந்திரம் 556

பதினாறு மாத்திரையளவு இடது மூக்கு வழியாக அதாவது இடைநாடியால் தூய மூச்சினை உள்ளே இழுப்பது பூரகம் ஆகும். பின்னர் இழுத்த மூச்சினை அறுபத்தி நான்கு மாத்திரையளவு உள்ளே நிறுத்தி வைப்பது கும்பகம். பின்னர் முப்பத்திரண்டு மாத்திரை அளவில் வலது மூக்கின் அதாவது பிங்கலையால் மூச்சை வெளியிட வேண்டும். இது இரேசகம் எனப்படும். அடுத்தமுறை பிங்கலையால் உள்ளெடுத்து இடைநாடியால் வெளியிடவேண்டும். இவ்வாறு இயன்றவரை மாறி மாறி செய்து மூச்சினை சுத்தம் செய்தால் இளமை பெருகும். (வாமம் – இடதுபக்கம், வஞ்சகம் – தந்திரம்) (142 – 16X1 , 16X4 , 16X2 மாத்திரையளவு)

(4) **இறைவன் இருப்பிடத்தை சுத்தம் செய்தல் –** சிவலிங்கத் தூய்மை

நாள் தோறும் சிவபூசை செய்ய வேண்டுமாதலால், முன்னாள் செய்த பூசையின் மலர்களோடு இலிங்கம் காட்சியளிக்கும். அவற்றை அப்புறப்படுத்தி இலிங்கத்தைத் தூய்மை செய்தலே இலிங்க சுத்தி எனப்படும். இலிங்கம் இல்லாதவர்கள் சிவலிங்கம் ஒன்றை பெற்று சாமியறையில் வைத்துக்கொள்ளலாம்.

மற்றவர்கள் பட அறை , படத்தட்டினை சுத்தம் செய்து தினசரி பூசை வழிபாட்டினை செய்யலாம்.

(5) **எழுந்தரு செய்தல் –** ஓம் நமசிவாய என்ற மந்திரத்தினை சொல்லி பின்னர் கீழே உள்ள திருமந்திரத்தினை பாடுக.

**சிவபெருமான் என்று நானழைத் தேத்த**
**தவபெருமான் என்று தான்வந்து நின்றான்**
**அவபெருமான் என்னை ஆளுடை நாதன்**
**பவபெருமானைப் பணிந்து நின்றேனே** – திருமந்திரம்

(6) இறைவனுக்கு **தூபம் , தீபம் காட்டி மலர்களை தூவி வணங்குக.**

(7) திருமுறைகளில் இருந்து **பஞ்சபுராணம்** பண்ணுடன் ஓதுக

(1) **திருஞானசம்பந்தர் தேவாரம் – திருப்பிரமபுரம் – பண் :நட்டபாடை**

தோடுடைய செவியன் விடையேறி ஓர்தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசிஎன் உள்ளம்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட் பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே

**அல்லது**

என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே
யிருங்கடல் வையத்து
முன்ன நீபுரி நல்வினைப் பயனிடை
முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி
வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும் பாடியும்
வழிபடு மதனாலே.

**(2) மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகம்**

பால்நினைந் தூட்டும் தாயினுஞ் சாலப்
பரிந்து நீ பாவியேனுடைய
ஊனினையுருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து புறம் புறந் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவது நீயே

**அல்லது**

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்மையே பெருகிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குத்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெருமானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
ஏங்கெழுந் தருளுவ தினியே

**(3) திருமாளிகைத்தேவர் அருளிய திருவிசைப்பா**

ஒளிவளர் விளக்கே உவப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்கும் தேனே
அளிவளர் உள்ளத்(து) ஆனந்தக் கனியே
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே

**அல்லது**

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றஎஞ் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண்(டு) உள்ளம்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே.





**(4) சேந்தனார் அருளிய மன்னுக திருப்பல்லாண்டு**

மன்னுக தில்லை வளர்கநம்
பத்தர்கள் வஞ்சகர் போயகல
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து
புவனி யெல்லாம் விளங்க
அன்னநடை மடவாள் உமைகோன்
அடியோ முக்கருள் புரிந்து
பின்னைப் பிறவி யறுக்க நெறிதந்த
பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே.

**அல்லது**

பாலுக்குப் பாலகன் வேண்டி
அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள்
செய்தவன் மன்னிய தில்லைதன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற
சிற்றம் பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல்
லானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

(5) பன்னிரண்டாம் திருமுறை – தடுத்தாட்கொண்ட **புராணம்** (பாடல் எண் : 252)

ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள
அளப்பருள் கரணங்கள் நான்கும்
சிந்தையேயாகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே யாக,
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில், தனிப்பெருங் கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்

**அல்லது**

உலகெல்லாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்:
அலகில் சோதியன்: அம்பலத்து ஆடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவோம்.

**(6) திருப்புகழ்**

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்கும்முக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணாசலம்அ மர்ந்தபெரு மாளே.

**அல்லது**

இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே
உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி
உனையெனது ளறியு மன்பைத் தருவாயே
மயில் தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்
வனசகுற மகளை வந்தித் தணைவோனே
கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே

(8) மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த **சிவபுராணம்** ஓதவேண்டும்
(வெள்ளிக் கிழமை களிலாவது இதனை ஓதுக)

(9) மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த **போற்றித் திருத்தாண்டகம்** ஓதவேண்டும்
(வார இறுதியிலாவது இதனை ஓதுக)





**(10) பிழை பொறுக்க வேண்டல்**

எல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின்அஞ் செழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப் பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய் கச்சி ஏகம்பனே

இந்த பாட்டினை பாடியதும் ஓம் நமசிவாய என்று மூன்றுமுறை சொல்லி – "சுவாமி என்னைப் பிழை செய்யாமல் காப்பாய் ஈஸ்வரா". என்னை அண்டருள் அப்பனே என்று சொல்லவும்.

**(11) வாழ்த்து**

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன் முறை அரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் கேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகம் எல்லாம்

**தென்னாடுடைய சிவனே போற்றி**
**எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி**

*குணரட்ணம் பார்த்தீபன்*
*மின் இலத்திரனியல் பொறியியலாளர்*



**யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் எழுந்தருளியிருக்கும் சிவஞானலிங்கேசுவரர்**



**சிவபுராணம்**

திருச்சிற்றம்பலம்

**தொல்லையிரும் பிறவி சூழும் தளை நீக்கி**
**அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கியதே - எல்லை**
**மருவா நெறியளிக்கும் வாதவூர் என்கோன்**
**திருவாசகம் எனும் தேன்.**

நமச்சிவாய வாஅழ்க! நாதன் தாள் வாழ்க!
இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!
கோகழி ஆண்ட குருமணி தன் தாள் வாழ்க!
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள் வாழ்க!
ஏகன், அநேகன், இறைவன், அடி வாழ்க!

வேகம் கெடுத்து ஆண்ட வேந்தன் அடி வெல்க!
பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய் கழல்கள் வெல்க!
புறத்தார்க்குச் சேயோன் தன் பூம் கழல்கள் வெல்க!
கரம் குவிவார் உள் மகிழும் கோன் கழல்கள் வெல்க!
சிரம் குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க!

ஈசன் அடி போற்றி! எந்தை அடி போற்றி!
தேசன் அடி போற்றி! சிவன் சேவடி போற்றி!
நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி!
மாயப் பிறப்பு அறுக்கும் மன்னன் அடி போற்றி!





சீர் ஆர் பெருந்துறை நம் தேவன் அடி போற்றி!
ஆராத இன்பம் அருளும் மலை போற்றி!

சிவன், அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்,
அவன் அருளாலே அவன் தாள் வணங்கி,
சிந்தை மகிழ, சிவபுராணம் தன்னை,
முந்தை வினை முழுதும் ஓய, உரைப்பன் யான்:
கண்ணுதலான், தன் கருணைக் கண் காட்ட, வந்து எய்தி,
எண்ணுதற்கு எட்டா எழில் ஆர் கழல் இறைஞ்சி
விண் நிறைந்து, மண் நிறைந்து, மிக்காய், விளங்கு ஒளியாய்!
எண் இறந்து, எல்லை இலாதானே! நின் பெரும் சீர்,
பொல்லா வினையேன், புகழும் ஆறு ஒன்று அறியேன்

புல் ஆகி, பூடு ஆய், புழு ஆய், மரம் ஆகி,
பல் விருகம் ஆகி, பறவை ஆய், பாம்பு ஆகி,
கல் ஆய், மனிதர் ஆய், பேய் ஆய், கணங்கள் ஆய்,
வல் அசுரர் ஆகி, முனிவர் ஆய், தேவர் ஆய்,
செல்லாஅ நின்ற இத் தாவர சங்கமத்துள்,
எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்!
மெய்யே, உன் பொன் அடிகள் கண்டு, இன்று வீடு உற்றேன்

உய்ய, என் உள்ளத்துள், ஓங்காரம் ஆய் நின்ற
மெய்யா! விமலா! விடைப் பாகா! வேதங்கள்
ஐயா என, ஓங்கி, ஆழ்ந்து, அகன்ற, நுண்ணியனே!

வெய்யாய்! தணியாய்! இயமானன் ஆம் விமலா!
பொய் ஆயின எல்லாம் போய் அகல, வந்தருளி,
மெய்ஞ்ஞானம் ஆகி, மிளிர்கின்ற மெய்ச் சுடரே!
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே!
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல் அறிவே!
ஆக்கம், அளவு, இறுதி, இல்லாய்! அனைத்து உலகும்
ஆக்குவாய், காப்பாய், அழிப்பாய், அருள் தருவாய்,
போக்குவாய், என்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பில்
நாற்றத்தின் நேரியாய்! சேயாய்! நணியானே!

மாற்றம், மனம், கழிய நின்ற மறையோனே!
கறந்த பால், கன்னலொடு, நெய் கலந்தால் போலச்
சிறந்து, அடியார் சிந்தனையுள் தேன் ஊறிநின்று,
பிறந்த பிறப்பு அறுக்கும் எங்கள் பெருமான்!

நிறங்கள் ஓர் ஐந்து உடையாய்! விண்ணோர்கள் ஏத்த
மறைந்து இருந்தாய், எம்பெருமான்! வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை,
அறம், பாவம், என்னும் அரும் கயிற்றால் கட்டி,
புறம் தோல் போர்த்து, எங்கும் புழு அழுக்கு மூடி,
மலம் சோரும் ஒன்பது வாயில் குடிலை
மலங்க, புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய,
விலங்கு மனத்தால், விமலா! உனக்குக்
கலந்த அன்பு ஆகி, கசிந்து உள் உருகும்
நலம் தான் இலாத சிறியேற்கு நல்கி,
நிலம் தன் மேல் வந்தருளி, நீள் கழல்கள் காஅட்டி,
நாயின் கடையாய்க் கிடந்த அடியேற்கு,
தாயின் சிறந்த தயா ஆன தத்துவனே!

மாசு அற்ற சோதி மலர்ந்த மலர்ச் சுடரே!
தேசனே! தேன் ஆர் அமுதே! சிவபுரனே!
பாசம் ஆம் பற்று அறுத்து, பாரிக்கும் ஆரியனே!
நேச அருள் புரிந்து, நெஞ்சில் வஞ்சம் கெட,
பேராது நின்ற பெரும் கருணைப் பேர் ஆறே!
ஆரா அமுதே! அளவு இலாப் பெம்மானே!
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே!
நீராய் உருக்கி, என் ஆர் உயிர் ஆய் நின்றானே!
இன்பமும் துன்பமும் இல்லானே! உள்ளானே!
அன்பருக்கு அன்பனே! யாவையும் ஆய், அல்லையும் ஆம்
சோதியனே! துன் இருளே! தோன்றாப் பெருமையனே!
ஆதியனே! அந்தம், நடு, ஆகி, அல்லானே!
ஈர்த்து என்னை, ஆட்கொண்ட எந்தை பெருமானே!
கூர்த்த மெய்ஞ்ஞானத்தால் கொண்டு உணர்வார் தம் கருத்தின்
நோக்கு அரிய நோக்கே! நுணுக்கு அரிய நுண் உணர்வே!

போக்கும், வரவும், புணர்வும், இலாப் புண்ணியனே!
காக்கும் எம் காவலனே! காண்பு அரிய பேர் ஒளியே!
ஆற்று இன்ப வெள்ளமே! அத்தா! மிக்காய்! நின்ற
தோற்றச் சுடர் ஒளி ஆய், சொல்லாத நுண் உணர்வு ஆய்,
மாற்றம் ஆம் வையகத்தின் வெவ்வேறே வந்து, அறிவு ஆம்
தேற்றனே! தேற்றத் தெளிவே! என் சிந்தனையுள்
ஊற்று ஆன உண் ஆர் அமுதே! உடையானே!

வேற்று விகார விடக்கு உடம்பின் உள் கிடப்ப
ஆற்றேன் "எம் ஐயா," "அரனே! ஓ!" என்று என்று
போற்றி, புகழ்ந்திருந்து, பொய் கெட்டு, மெய் ஆனார்
மீட்டு இங்கு வந்து, வினைப் பிறவி சாராமே,
கள்ளப் புலக் குரம்பை கட்டழிக்க வல்லானே!
நள் இருளில் நட்டம் பயின்று ஆடும் நாதனே!
தில்லையுள் கூத்தனே! தென்பாண்டி நாட்டானே!
அல்லல் பிறவி அறுப்பானே! ஓ!" என்று,
சொல்லற்கு அரியானைச் சொல்லி, திருவடிக் கீழ்ச்
**சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார்**
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவன் அடிக் கீழ்,
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

**தொல்லையிரும் பிறவி சூழும் தளை நீக்கி**
**அல்லல் அறுத்து ஆனந்தம் ஆக்கியதே – எல்லை**
**மருவா நெறியளிக்கும் வாதவூர் என்கோன்**
**திருவாசகம் எனும் தேன்.**

திருச்சிற்றம்பலம்



**திருக்கயிலை மலை**

# போற்றித் திருத்தாண்டகம்

**தருமபுர ஆதீன வெளியீடு – ஆறாம் திருமுறை – திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்**

(நன்றிகள் – தருமை ஆதீனம், வெளியீடு எண் 992)

பதிக எண் 55

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2636)

பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி
பிறவி யறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்று மெய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாக மசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2637)

மருவார் புரமூன்று மெய்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி யென்னைப் படைத்தாய் போற்றி
உள்ளாவி வாங்கி யொளித்தாய் போற்றி
திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி யோடும் முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2638)

வானத்தார் போற்றும் மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கும் உடலே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்குந் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ யாட லுகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2639)

ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி யெங்கும் பரந்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வா ரொருவரையு மில்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2640)

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவ ரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி யுலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2641)

பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்துஞ்சொல் லானாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி

விண்ணும் நிலனுந்தீ யானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2642)

இமையா துயிரா திருந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாக மாகத் தணைத்தாய் போற்றி
ஊழியே ழான வொருவா போற்றி
அமையா வருநஞ்ச மார்ந்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2643)

மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர்தொழுந் தேவே போற்றி
சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி
ஆவா அடியேனுக் கெல்லாம் போற்றி
அல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2644)

நெடிய விசும்பொடு கண்ணே போற்றி
நீள அகல முடையாய் போற்றி
அடியும் முடியு மிகலிப் போற்றி
யங்கொன் றறியாமை நின்றாய் போற்றி
கொடியவன் கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலா என் சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2645)

உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி
ஓதாதே வேத முணர்ந்தாய் போற்றி
எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி
பண்ணா ரிசையின்சொற் கேட்டாய் போற்றி
பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (2646)

1. **பொழிப்புரை (2636) :** விண்ணாகியும் வேறு பூதங்களாகியும் நிலைபெற்றிருப் பவனே! அடியேனை வேற்றிடத்துக்குத் திரும்பிச் செல்லாதபடி அடிமையாகக் கொண்டவனே! இன்ப ஊற்றாகி உயிர் அறிவினுள்ளே நிலைபெற்றிருப்பவனே! இடையறாத சொற்களின் ஒலியே! சக்தியாகி ஐம்பூதங்களிலும் நான்கு வேதங் களிலும் ஆறு அங்கங்களிலும் இருப்பவனே! காற்றாகி எங்கும் கலந்தவனே! கயிலை மலையில் உறைபவனே! உனக்கு வணக்கங்கள் பல.

2. **பொழிப்புரை (2637) :** பேய்களோடு கூத்தாடுதலை உகந்தவனே! பிறவியைப் போக்கும் தலைவனே! உயிர்களைப் பல வகையான பிறப்புக்களில் நிறுத்தி விளையாடுதலில் வல்லவனே! விரும்பி என் உள்ளத்துப் புகுந்தவனே! பொய்யைச் சார்பாகக் கொண்ட முப்புரங்களை அழித்தவனே! என் சிந்தையை விடுத்துப் போகாது இருப்பவனே! பாம்பைக் கச்சாக அணிந்தவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

3. **பொழிப்புரை (2638) :** பகைவர் மும்மதில்களையும் அழித்து, விரும்பி என் உள்ளத் துப் புகுந்து, என்னை உருவமுடையவனாகப் படைத்து, என் உயிர் உடம்பின்வழிப் படாதபடி நீக்கி நின் வழிப்படுத்து எனக்கு இன்பமாகிநின்ற செயலுடையவனாய், உலகத்தாரால் முன்னின்று துதிக்கப்படுபவனாய், கருவாய்க்கப்பெற்றுச் சஞ்சரிக்கும் காளமேகம் போல் உலகுக்கு நலன் தருவானாய், உள்ள கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

4. **பொழிப்புரை (2639) :** தேவர் போற்றும் அமுதமாய், வந்து என் உள்ளம் புகுந்த வனாய், உயிர்களின் குறையைப் போக்கும் அருள் உருவம் உடையவனாய், ஓங்கித்

தீப்பிழம்பாய் உயர்ந்தவனாய், தேனை வடித்த தெளிவு போல்பவனாய், தேவர்களுக்கும் தேவனாய், சுடுகாட்டுத் தீயில் கூத்தாடுதலை விரும்பியவனாய் உள்ள கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

5. **பொழிப்புரை (2640) :** ஊர்களாகவும் உலகமாவும் பரவியவனே! அனற் பிழம்பாய் ஓங்கி உயர்ந்தவனே! புகழ் வடிவினனாய் எங்கும் பரவியவனே! நீங்காது என் உள்ளத்தில் புகுந்தவனே! நீர் நிறைந்த ஓடைபோலக் குளிர்ச்சி தருபவனே! ஒப்பற்றவனே! கார்முகில் போல அருளவல்லவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

6. **பொழிப்புரை (2641) :** முதற்கண் சில வேறு தேவர்களாய் நின்று அருள் வழங்கிப் பின் அத்தேவர்களும் நீ ஒருவனேயாகி ஒன்றி நின்றவனே! தேவர்களும் அறிய முடியாத பெரிய தேவனே! புல்லாகிய ஓரறிவு உயிருக்கும் வாழ்க்கை வழங்கியவனே! நீங்காது என் உள்ளத்துப் புகுந்தவனே! உலகுகள் தோறும் பல உயிர்களாக நின்றபவனே! உலகைப் பற்றி அதனைக் கைவிடாதவனே! கல்லின் கண்ணும் உள்ள உயிர்களாய் நிற்கும் ஒளிப்பொருளே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

7. **பொழிப்புரை (2642) :** பண்ணின் இசையாகி இருப்பவனே! உன்னைத் தியானிப்பவரின் பாவத்தைப் போக்குபவனே! எண்ணும் எழுத்தும் சொல்லும் ஆனவனே! என் உள்ளத்தை நீங்காத தலைவனே! விண்ணும் தீயும் நிலனும் ஆகியவனே! மேலார்க்கும் மேலாயவனே! கண்ணின் மணி போன்ற அருமையானவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

8. **பொழிப்புரை (2643) :** ஏனைய உயிர்களைப் போல இமைக்காமல் மூச்சுவிடாமல் இருப்பவனே! என் உள்ளத்தை நீங்காத தலைவனே! பார்வதி பாகனே! பல ஊழிகளையும் கடந்தவனே! பொருந்தாத கொடிய விடத்தை உண்டவனே! முதற் பழையோனே! பொறுமையாகச் செயற்படும் ஞான ஒளி உடையவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

9. **பொழிப்புரை (2644) :** மூத்தலோ பிறத்தலோ இறத்தலோ இல்லாது எல்லாப் பொருள்களுக்கும் முற்பட்டு என்றும் இயற்கையாகவே விளங்கும் தேவர் தலைவரும்

தொழும் தெய்வமே! எங்கும் பரவியிருப்பவனே! ஐயோ! என்று வருந்தும் அடியேனுக்கு எல்லாமாய் இருக்கும் பெருமானே! கனகத்திரள் போல்பவனே! கயிலை மலையானே! அடியேன் துயரங்கள் வருத்த வருந்துகின்றேன். என்னைக் காப்பாயாக. உனக்கு வணக்கங்கள் பல.

10. **பொழிப்புரை (2645) :** பெரும்பரப்புடைய வானகத்திற்கு இருப்பிடமாய், எப்பொருளின் நீள அகலங்களையும் தன்னுள் அடக்கியவனாய், உன் அடியையும், முடியையும் காண அரியும், அயனும் தம்முள் மாறுபட்டு முயன்றும் அறிய முடியாமல் அனற்பிழம்பாய் நின்றவனாய்க் கொடிய வலிய கூற்றுவனை உதைத்தவனாய், அடியேனுடைய உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டவனாய், கொடிய இடியும் மின்னலும் ஆகியுள்ள கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

11. **பொழிப்புரை (2646) :** உண்ணாது உறங்காது இருப்பவனே! வேதங்களை ஓதாது உணர்ந்தவனே! உன்பெருமையை நினைத்துப் பார்க்காது செயற்பட்ட இராவணனைச் சிறிதளவு விரலை அழுத்தி நசுக்கி மகிழ்ந்து, அடக்கி ஆள்பவனே! பின் அவன்பால் பண்ணோடு கூடிய இசையின் இனிமையைச் செவிமடுத்தவனே! முன்னரேயே அடியேனுடைய உள்ளத்தில் புகுந்தவனே! உலகுக்குப் பற்றுக் கோடாய் இருப்பவனே! கயிலை மலையானே! உனக்கு வணக்கங்கள் பல.

**திருப்பிரமபுரம் - வழிமொழித் திருவிராகம் - சாதாரி**

**தருமபுர ஆதீன வெளியீடு - மூன்றாம் திருமுறை - திருஞானசம்பந்தர் தேவாரம்**

(நன்றிகள் - தருமை ஆதீனம் , வெளியீடு எண் 989)

சுரருலகு நரர்கள்பயி றரணிதல
முரணழிய வரணமதின்முப்
புரமெரிய விரவுவகை சரவிசைகொள்
கரமுடைய பரமனிடமாம்
வரமருள வரன்முறையி னிரைநிறைகொள்
வருசுருதி சிரவுரையினாற்
பிரமனுய ரரனெழில்கொள் சரணவிணை
பரவவளர் பிரமபுரமே. (3514)

தானுமிகு வாணிசைகொ டானுவியர்
பேணுமது கானுமளவிற்
கோனுநுத னீணயனி கோணில்பிடி
மாணிமது நானும்வகையே
ஏனுகரி பூணழிய வாணியல்கொண்
மாணிபதி சேணமரர்கோன்
வேனுவினை யேணிநகர் காணிறிவி
காணநடு வேனுபுரமே. (3515)

பகலொளிசெய் நகமணியை முகைமலரை
நிகழ்சரண வகவுமுனிவர்க்
ககலமலி சகலகலை மிகவுரைசெய்
முகமுடைய பகவனிடமாம்
பகைகளையும் வகையிலறு முகவிறையை
மிகவருள நிகரிலிமையோர்
புகவுலகு புகழவெழி றிகழநிக
ழலர்பெருகு புகலிநகரே (3516)

அங்கண்மதி கங்கைநதி வெங்கணர
வங்களெழி றங்குமிதழித்
துங்கமலர் தங்குசடை யங்கிநிக
ரெங்களிறை தங்குமிடமாம்
வெங்கதிர்வி ளங்குலக மெங்குமெதிர்
பொங்கெரிபு லன்கள்களைவோர்
வெங்குருவி ளங்கியுமை பங்கர்சர
ணங்கள்பணி வெங்குருவதே. (3517)

ஆணியல்பு காணவன வாணவியல்
பேணியெதிர் பாணமழைசேர்
தூணியற நாணியற வேனுசிலை
பேணியற நாணிவிசயன்

பாணியமர் பூணவருண் மானுபிர
மாணியிட மேணிமுறையிற்
பாணியுல காளமிக வாணின்மலி
தோணிநிகர் தோணிபுரமே. (3518)

நிராமய பராபர புராதன
பராவுசிவ ராகவருளென்
றிராவுமெ திராயது பராநினை
புராணனம ராதிபதியாம்
அராமிசை யிராதெழி றராயர
பராயண வராகவுருவா
தராயனை விராயெரி பராய்மிகு
தராய்மொழி விராயபதியே. (3519)

அரணையுறு முரணர்பலர் மரணம்வர
விரணமதி லரமலிபடைக்
கரம்விசிறு விரகனமர் கரணனுயர்
பரனெறிகொள் கரனதிடமாம்
பரவமுது விரவவிடல் புரளமுறு
மரவையரி சிரமரியவச்
சிரமரன சரணமவை பரவவிரு
கிரகமமர் சிரபுரமதே. (3520)

அறமழிவு பெறவுலகு தெறுபுயவன்
விறலழிய நிறுவிவிரன்மா
மறையினொலி முறைமுரல்செய் பிறையெயிற
னுறவருளு மிறைவனிடமாங்
குறைவின்மிக நிறைதையுழி மறையமரர்
நிறையருள முறையொடுவரும்
புறவனெதிர் நிறைநிலவு பொறையனுடல்
பெறவருளு புறவமதுவே. (3521)




விண்பயில மண்பகிரி வண்பிரம
　　னெண்பெரிய பண்படை கொண்மால்
கண்பரியு மொண்பொழிய நுண்பொருள்கள்
　　தண்புகழ்கொள் கண்டனிடமாம்
மண்பரியு மொண்பொழிய நுண்புசகர்
　　புண்பயில விண்படரவச்
சண்பைமொழி பண்பமுனி கண்பழிசெய்
　　பண்புகளை சண்பைநகரே. (3522)

பாழியுறை வேழநிகர் பாழமணர்
　　சூழமுட லாளருணரா
ஏழினிசை யாழின்மொழி யேழையவள்
　　வாழுமிறை தாழுமிடமாங்
கீழிசைகொண் மேலுலகில் வாழரசு
　　சூழரசு வாழவரனுக்
காழியசில் காழிசெய வேழுலகி
　　லூழிவளர் காழிநகரே. (3523)

நச்சரவு கச்செனவ சைச்சுமதி
　　யுச்சியின்மி லைச்சொருகையான்
மெய்ச்சிர மனைச்சுலகி னிச்சமிடு
　　பிச்சையமர் பிச்சனிடமாம்
மச்சமத நச்சிமத மச்சிறுமி
　　யைச்செய்தவ வச்சவிரதக்
கொச்சைமுர வச்சர்பணி யச்சுரர்க
　　ணச்சிமிடை கொச்சைநகரே. (3524)

ஒழுகலரி தழிகலியி லூழியுலகு
　　பழிபெருகு வழியைநினையா
முழுதுடலி லெழுமயிர்க டழுவுமுனி
　　குழுவினொடு கெழுவுசிவனைத்
தொழுதுலகி லிழுகுமல மழியும்வகை
　　கழுவுமுரை கழுமலநகர்ப்
பழுதிலிறை யெழுதுமொழி தமிழ்விரகன்
　　வழிமொழிகண் மொழிதகையவே. (3525)

1. **பொழிப்புரை (3514) :** தேவர் வாழ்கின்ற விண்ணுலகமும், மனிதர்கள் வாழ்கின்ற இப்பூவுலகமும் வலிமை அழியும்படி துன்புறுத்திய, காவலாகக் கோட்டை மதில்களையுடைய முப்புரங்களும் எரிந்து சாம்பலாகுமாறு ஓர் அம்பை விரைவாகச் செலுத்தும் ஆற்றலுடையவர் சிவபெருமான். எல்லாச் சுரங்களும் வரிசைபெற அமைந்த, வேதசிரமாகிய உபநிடதஉரைகளை வரன்முறையோடு ஓதி, அரனாரின் எழில் மிகுந்த புகழை எடுத்துரைத்துச் சரணடைந்து அவர் இணை மலரடியைத் தான் வரம் பெற வேண்டிப் பிரமன் துதித்தலால் புகழால் ஓங்கிய பிரமாபுரம் எனப்பட்டது.

2. **பொழிப்புரை (3515) :** தன்னை அன்பால் வழிபடும் தேவர்கள் கயமுகாசுரனால் துன்புற்று அஞ்சி வழிபட, நிலைபெற்ற சிவபெருமான் வலிமைமிகுந்த ஆண்யானை யின் வடிவம் கொண்டருளினார். வளைந்த நெற்றியையும், நீண்ட கண்களையு முடைய உமாதேவி குற்றமில்லாதபடி பெண்யானையின் உருவை எடுத்தாள். மது என்னும் அசுரன் வெட்கப்படும்படியும், வலிமைகொண்டு தீமை செய்த கயமுகாசுரன் அழியுமாறும் ஆற்றல்மிக்க அழகிய விநாயகக் கடவுளைத் தோற்றுவித்த பெருமைக்குரிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பதியாவது, வானுலகிலுள்ள தேவர்களின் தலைவனான இந்திரன் சூரபதுமனுக்கு அஞ்சி ஒளிந்து வாழ்ந்தால் மூங்கிலை ஏணியாகக் கொண்டு, தான் நேரே காணமுடியாத தேவலோகத்தின் நிலையை ஒளிந்து காணும்பொருட்டு நட்ட வேணுபுரம் ஆகும். சூரபதுமனுக்கு அஞ்சி இந்திரன் வந்து மூங்கிலில் மறைந்திருந்து பூசித்த வரலாற்றால் போந்தபெயர் வேணுபுரம் என்பது.

3. **பொழிப்புரை (3516) :** சூரியனைப் போல் பிரகாசிக்கும் மலையிற் பிறந்த நாகரத்தினத்தையும், அரும்பு விரிந்த செந்தாமரையையும் போன்ற திருவடிகளைச் சரணாக அடைந்த சனகாதி முனிவர்கட்குச் சகல கலைகளையும் நன்கு உணருமாறு விரித்து உபதேசித்தருளிய திருவருள் நோக்கத்தையுடையவர் சிவபெருமான். அத்தகைய பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது பகையசுரர்களை வேர் அறுக்கும் வகையில் அறுமுகக்கடவுளை அருளும்படி ஒப்பற்ற தேவர்கள் சரண்புக அழகுடன் திகழும் புகழ்மிக்க திருப்புகலி என்னும் திருத்தலமாகும். தேவர்கள் புகலடைந்தமை யால் புகலி எனப் பெயர் பெற்றது.

4. **பொழிப்புரை (3517) :** அழகிய சந்திரனும், கங்கை நதியும், கொடிய பாம்புகளும், அழகிய இதழ்களையுடைய கொன்றை மலரும் நெருப்புப் போன்ற சடைமுடியில்

அணிந்தவர், எங்கள் இறைவராகிய சிவபெருமான். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, சூரியனால் விளங்குகின்ற இவ்வுலகிலுள்ளோர் நல்வழிக்கு மாறாக மிக வருத்துகின்ற மனம் முதலிய அந்தக் கரணங்களின் சேட்டையால் வரும் துன்பத் தைக் களைய விரும்புபவர்கள் பணியும் வெங்குரு ஆகும். அது தேவகுருவாகிய வியாழபகவான் உமை பங்கராகிய பரமனைப் பணிந்து பேறு பெற்ற தலமாகும்.

5. **பொழிப்புரை (3518) :** விசயனுடைய வீரத்தன்மையை உமை காண வனத்தில் வாழும் வேடன் வடிவம் கொண்டு, அவனுக்கு எதிராகப் போர் தொடங்கி, அவன் சொரியும் மழைபோன்ற அம்புகளும், அவ்வம்புகள் தங்கிய அம்பறாத்துணியும் நீங்கவும், வில்நாண் அறுபடவும், வளைந்த மூங்கிலால் வடிவமைத்த வில்லைத் துணித்தவர். அதனால் அர்ச்சுனன் நாணமுற்றுக் கையால் அடித்துச் செய்யும் மற்போர் செய்யவர, அவனுக்கு அருள்புரிந்தவர், பிரமாணமான மறைகட்கு வாச்சியமாக (பொருளாக) உள்ள சிவபெருமான். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது காலாந்தரத்தில் பிரளயகால வெள்ளமானது உலகம் முழுவதையும் மூழ்கச் செய்ய, ஆற்றல் பெருகுமாறு ஊழி வெள்ளத்தில் தோணிபோல் மிதந்த தோணிபுரம் எனப்படும் திருத்தலமாகும். பிரமாணி – பிரமாணமாகிய மறைகட்கு வாச்சியமாக உள்ளவர்.

6. **பொழிப்புரை (3519) :** இறைவன் நோயற்றவன். அனைத்துப் பொருட்கட்கும் மேலான பரம்பொருள். மிகப்பழமையானவன். பராவுசிவன் என்று இரவும், பகலும் போற்றித் தியானிக்கப்படுகின்ற பழமை யானவன். தேவர்கட்கெல்லாம் தலைவனாக விளங்கும் அச்சிவ பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, இரணியாக்கனால் கொள்ளப்பட்டுக் கடலில் கிடந்த அழகிய பூமியை, திருமால் பாற்கடலில் அரவணை யிலிருந்து எழுந்து வந்து வெள்ளைப் பன்றி உருவெடுத்து இரணியாக்கனைக் கொன்று பூமியைக் கொம்பிலேற்றி அவனை வருத்திய பழிபோகச் சிவனை வழிபட்ட புகழ்மிக்க பூந்தராய் என்னும் திருத்தலமாகும்.

7. **பொழிப்புரை (3520) :** மும்மதில்களை அரணாகக் கொண்ட திரிபுரத்தசுரர்களால் பலருக்கு மரணம் ஏற்பட, காயங்கள் முதலான உண்டாக்கித் துன்புறுத்தும் அம்மதி லின் மேல் அரத்தால் அராவப்பட்டஆயுதத்தைக் கையினால் ஏவிய சமர்த்தனும், தன்னைச் சரணடைந்தவர்களின் கரணங்களின் சேட்டையை அடக்குவிப் போனும், யாவரினும் உயர்ந்த மேன்மையுடையவனும், உபதேசிக்கும் முறையைக் கொண்ட திருக்கரத்தை உடையவனுமான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, எல்லோராலும் போற்றப்படுகின்ற அமுதத்தைப் பாற்கடலிலிருந்து கடைந்து எடுத்த

காலத்தில், தனக்குக் கிடைக்கும்படி பந்தியில் வந்த பாம்பின் சிரத்தினைத் திருமால் அரிந்து வீச, அந்தத் தலையானது சிவபெருமானைச் சரணடைந்து துதித்தலால் இரு கிரகங்களாக நவக்கிரக வரிசையில் பொலியும் சிரபுரம் என்னும் திருத்தலம் ஆகும்.

8. **பொழிப்புரை (3521) :** தருமம் அழியுமாறு உலகத்தைத் துன்புறுத்திய புயவலிமை யுடைய இராவணனது வலிமை அழியுமாறு தம் காற்பெருவிரலை ஊன்றி, பின் இராவணன் தவறுணர்ந்து சாமகானம் பாடிப் போற்ற வளைந்த பற்களையுடைய அந்த இராவணனுக்கு நீண்ட வாழ்நாளும், ஒளிபொருந்திய வாளும் அருளியவர்சிவ பெருமான். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, வேதங்கட்கும், தேவர்கட்கும் ஒத்ததாகிய நீதியை வழங்கும்படி, முறையிட்டு வந்த புறாவிற்குரியவனாகிய வேடன் எதிரே, புறாவின் எடைக்குச் சமமாகத் தன் சதையை அறுத்து வைத்தும் நிரம்பாது தான் துலையேறி எடை சமன்பெறுமாறு செய்த சிபிச்சக்கரவர்த்தி குறையில்லா உடம்பைப் பெற அருள் புரிந்ததும், தான் செய்த பழிபோக புறா உருவில் வந்த தீக்கடவுள் பூசித்ததும் ஆகிய புறவம் என்னும் திருத்தலமாகும்.

9. **பொழிப்புரை (3522) :** சிறந்த பிரமன் அன்ன உரு எடுத்து ஆகாயத்தில் சென்றும், மிக்க மதிப்புடைய தகுதியான சக்கராயுதப் படையைக் கொண்ட திருமால் பன்றி உரு எடுத்து மண்ணைப் பிளந்து சென்றும் காணப்பெறாது, கண்ணால் பற்றக்கூடிய ஒளி நீங்க, நுண்ணிய பொருளாக, இனிய கீர்த்தியைக் கொண்ட அகண்டனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், மண்ணின் நுண்புழுதிபோல் அராவிய இரும்பு உலக்கைத்தூள் சண்பைப் புல்லாக முளைக்க அவற்றால் யாதவ குமாரர்கள் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு இறந்து விண்ணுலகை அடைய, துருவாச முனிவரை இழிவு செய்து பழிகொண்ட தன் இனத்தவர்கட்கு நற்கதி உண்டாகுமாறும் சண்பை என்னும் கோரையால் உண்டான புண்கள் தீருமாறும் கண்ணபிரான் போற்றி வழிபட்டுச் சாபத்தை நீக்கியதால், சண்பை என்னும் பெயர் பெற்ற திருத்தலமாகும்.

10. **பொழிப்புரை (3523) :** பாழியில் தங்கும், யானையை ஒத்த சமணர்களும், கூட்டமாக வாழும் உடலைப் பாதுகாப்போராகிய பௌத்தர்களும் இறைவனை உணராதவர்கள். ஏழிசையும், யாழின் இனிமையும் போன்ற மொழியுடைய உமாதேவியை உடனாகக் கொண்டு சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், கீழுலகில் புகழ்கொண்ட அரசர்களும், மேலுலகில் வாழ்கின்ற அரசனாகிய இந்திரனும், மற்றும் சூழ்ந்துள்ள





வர்களும் வாழும்பொருட்டு நடனம் புரிந்த இறைவனிடம் ஆடலில் தோற்று, தன் குற்றம் நீங்குமாறு அப்பெருமானை வழிபட்டு காளி அருள் பெற்ற செயல் சப்தலோகங்களிலும் பல ஊழிக்காலமாக பேசப்பட்டு வரும் பெருமையுடைய காழிநகராகும்.

11. **பொழிப்புரை (3524) :** நஞ்சையுடைய பாம்பைக் கச்சாகக் கட்டி, சந்திரனைத் தலையிலே சூடி, ஒரு கையில் பிரமகபாலத்தைத் தாங்கி, உலகிலே நாடோறும் இடுகின்ற பிச்சையை விரும்பும் பித்தனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், மீன் நாற்றத்தை விரும்பும் மச்சகந்தியை வசமிழந்து ஆற்றினிடையில் புணர்ந்த கொச்சைத் தன்மைக்குக் கதறி அது நீங்க பராசரமுனிவர் வணங்க, தேவர்களும் விரும்பி அனுகும் கொச்சைவயம் எனப்படும் திருத்தலமாகும்.

12. **பொழிப்புரை (3525) :** நல்லொழுக்கத்தில் நிற்றல் அரிதாகி அழிகின்ற கலிகாலத்தில் உலகில் பழிபெருகுதலை நினைந்து வருந்தி, உடல் முழுவதும் முடி முளைத்துள்ள உரோமச முனிவர் தம் குழுவினருடன் அங்குத் தங்கி, சிவபெருமானைத் தொழுது, உலக இச்சைக்கு இழுக்கின்ற மலங்கள் நீங்கிச் சிவஞான உபதேசம் பெற்றதால் கழுமலம் எனப் போற்றப்படும் திருத்தலத்தினை வணங்குவோரின் குற்றம் இல்லையாகச் செய்கின்ற தலைவனும், எழுதும் வேதமெனப் போற்றப்படும் தமிழ் வல்லவனுமாகிய ஞானசம்பந்தன் அருளிய இந்த வழிமொழித் திருவிராகப் பாசுரங்கள் பாடிப் பயன்பெறும் தன்மை உடையன.



**திருக்கழுமலம் – சீர்காழி திருக்கோவில்**

16–ஏப்ரல்–2019 அன்று துவாதசி திதியில் இறைபதம் எய்திய எங்கள் அம்மா திருமதி.சிவநேசரெத்தினம் குணரத்தினம், கொக்குவில் கிழக்கு , யாழ்ப்பாணம் (முன்னாள் பிரதி அதிபர் – கொக்குவில் இந்துக் கல்லூரி) அவர்களின் நினைவாக வெளியிட்ட ”முக்திதரும் செந்தமிழாகம சிவபூசை” என்ற நினைவு மலரிற்காக 16–மே–2019 , அவரது ஆத்மசாந்தி மற்றும் அந்தியேட்டி நிகழ்வில் வெளியிடப்பட்டது. இதில்வரும் திருமுறைகளின் பொழிப்புரைகள் தருமபுர ஆதீன திருமுறைத் தொகுப்பு நூற்களில் எடுக்கப்பட்டது. சிலவற்றிற்கு எனது சிற்றறிவுக்கு எட்டிய அனுபவ விளக்கங்களை சேர்த்துளேன். மற்றும் சிவத்திரு.சத்திவேல் முருகனார் எழுதிய செந்தமிழாகம சிவபூசை செய்வது எப்படி என்ற நூலை அடிப்படியாக வைத்து , நாளாந்த இயந்திர வாழ்க்கையை கருத்திற்கொண்டு எளியவடிவமாக எழுதப்படுள்ளது. அவரின் செந்தமிழாகம சிவபூசை செய்வது எப்படி என்ற நூலின் முழுவடிவம் பின்னிணைப்பாக இணைக்கப்படுள்ளது.



திருவாசக அரண்மனை – நாவற்குழி, யாழ்ப்பாணம்




# செந்தமிழாகம சிவபூசை செய்வது எப்படி?

### படலம் – 1

## புகு முகவுரை

இறைவனை அடைவிக்கும் நெறிகள் நான்கு. அவை, சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்று தமிழிலும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று வடமொழியிலும் வழக்கில் கூறப்படுகின்றன. இந்நான்கு நெறிகளில் நோன்பு எனப்படும் இரண்டாம் படிமுறை ஆகிய கிரியையில் சிவபூசை அடங்கும்.

இது படிமுறை என்றமையால் இந்தப்படியில் காலை வைத்துத் தான் அடுத்த படிகளில் ஏற முடியும் என்பதும், ஏறி இறைவனை அடைய முடியும் என்பதும் கூறாமலே விளங்கும். இதனால் இதன் இன்றியமையாமை புலனாகிறது.

இவ்வாறாயின், இதன் இன்றியமையாமை பற்றி நம் சமய குரவர்களின் கருத்து என்ன? அவர்கள் இதை வலியுறுத்தி இருக்கிறார்களா? முதலில் கிரியை நெறியை விளக்க வந்தவர் என்றும், நம் சமய குரவரில் முதலாவதாக வைத்து எண்ணப்படு பவருமான சம்பந்தர் இதைப் பற்றி என்ன சொல்கிறார் என்று பார்ப்போம்.

**நறைமலிதரும் அளறொடுமுகை**
**நகுமலர்மிகு வளரொளி**
**நிறைபுனல்கொடு தனைநினைவொடு**
**நியதமும்வழி படுமடியவர்**
**குறைவிலபதம் அணைதரவருள்**
**குணம்உடைஇறை உறைவனபதி**
**சிறைபுனல்அமர் சிவபுரமது**
**நினைபவர்செய மகள்தலைவரே!**

இந்தப் பாட்டில் சம்பந்தர் இறைவனுக்கு நறுநீரால் திருமஞ்சனம் செய்யச் சொல்கிறார் சந்தனக் கலவையைச் சாத்தச் சொல்கிறார் அன்றலர்ந்த நாண் மலர்களால் நறும்புகை காட்டச் சொல்கிறார் பதினாறு தீபங்களை வளரொளியாக நிரல்படக் காட்டச் சொல்கிறார். இவையனைத்தும் சிவபூசை எனப்படும் கிரியை வழிபாட்டின் உறுப்புக்கள்.

இவற்றைக் கொண்டு நியதமாக அதாவது நியதிப்படி வழிபடும் அடியவர்க்குச் திருச்சிவபுரத்து இறைவனாகிய சிவபெருமான் குறை வில்லாத பதமுத்தியாகிய சாமீப முத்தியை நாம் உரிமைக்குரல் கொடுக் காமலேயே தானாக வந்து சேர உதவுவான் என்கிறார்.

சரி, இது இறந்தபின் அல்லவா வரும், என்று ஏக்கத்துடன் கேட்போர்க்கு ஆறுதலாக இவ்வாறு சிவபூசை செய்து நியதமாக வழிபடும் அடியவரைச் செயமகள் என்று கூறப்படும் திருமகளின் தலைவர் என்று மக்கள் போற்றும்படி இவ்வுலகிலேயே நிதிக்குவையும் சிவபெருமான் நல்குவார் என்று பாட்டின் இறுதியில் கூறுகிறார். இப்படி வழிபடுவோர்க்கு அப்படி அருள் செய்வது இறைவற்கு இயல்பான குணம் என்றும் உறுதி செய்கிறார். “அருள் குணம் உடைய இறை“ என்று பாட்டில் வரும் சொற்றொடர் இதைக் குறிக்கிறது.

இதனால் சிவபூசையின் இன்றியமையாமையைச் சம்பந்தர் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளார் என அறிகிறோம்.

அடுத்து அப்பர் சுவாமிகளும் பல பாடல்களில் சிவபூசையின் இன்றியமை யாமையைக் கூறி இருக்கிறார். ஒன்றிரண்டைப் பார்ப்போம்.

**வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்**
**தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்**
**சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே**
**வீழ்த்தவா வினையேன் நெடுங் காலமே**

**பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்**
**நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்**
**ஆக்கைக்கே இரை தேடி அலமந்து**
**காக்கைக் கேஇரை ஆகிக் கழிவரே**

அடுத்து, சுந்தரரும் சிவபூசையின் இன்றியமையாமையைப் பல பாடல்களில் பாடியுள்ளார். அதில் ஒன்று வருமாறு

**இயக்கர் கின்னரர் யமனொடு வருணர்**
**இயங்கு தீவளி ஞாயிறு திங்கள்**
**மயக்க மில்புவி வானர நாகம்**
**வசுக்கள் வானவர் தானவர் எல்லாம்**
**அயர்ப்பொன் றின்றிநின் திருவடி அதனை**
**அர்ச்சித் தார்பெறும் ஆரருள் கண்டு**
**திகைப்பொன் றின்றிநின் திருவடி அடைந்தேன்**
**செழும்பொழில் திருப்புன் கூரு ளானே!**

அடுத்து, மணிவாசகரும் சிவபூசையின் இன்றியமையாமையைப் பல பாடல்களில் பாடியுள்ளார்.

**முத்தனே முதல்வா முக்கணா முனிவர்**
**மொட்டறா மலர்பறித் திறைஞ்சிப்**
**பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்**
**பரகதி கொடுத்தருள் செய்யும்**
**சித்தனே செல்வத் திருப்பெருந் துறையில்**
**செழுமலர்க் குருந்தமே வியசீர்**
**அத்தனே அடியேன் ஆதரித் தழைத்தால்**
**அதெந்துவே என்றரு ளாயே!**

இதையொட்டி பல்வேறு நூல்களும் பரக்க சிவபூசைப் பெருமையைக் கூறுகின்றன. கடல்போல விரியும் அவற்றில் சிவ தருமோத்தரம் என்ற நூலின் ஒரு பாடல் குறிப்பிடத்தக்கது. அது வருமாறு:

**கேட்டுளார் மகிழச் சொல்வார் கிடைக்குமோ எமக்கும் என்று**
**வேட்டுளார் உபகா ரங்கள் விளைத்துளார் இவரும் மெய்ய**
**நாட்டுளார் பிறக்கில் இம்மண் நாயகர் ஆவர் ஆகித்**
**தேட்டுளார் சிவதன் மங்கள் வாதனை நிகழ்த லாலே**

சிவபூசையின் பெருமைகளை இவ்வாறு சமயகுரவர்களும், பலநூல்களும் சொல்லக் கோட்டவர்கள் பிறருக்கு அதனை மகிழும்படி

சொல்வார்கள் அதைக் கேட்டவர்கள் இச்சிவபூசை முறைப்படி செய்யும் பேறு எமக்கும் கிடைக்குமோ என்று விரும்புவார்கள். விரும்பியவர்க்கு அவ்வாய்ப்பு என்னும் உபகாரத்தை விளைவித்த பின்னர் அவர்கள் நாட்டிலே பிறந்தால் அவர்கள் நாட்டிற்கு நாயகராகப் பிறப்பார்கள் பிறந்து செல்வமனைத்தும் பெற்றுச் சிவதன்மங்களை மேலும் மேலும் செய்வார் கள். காரணம் மேல் பிறப்பில் செய்த சிவபூசையின் வாசனை அவர்களை அப்படிச் செய்யத் தூண்டும் என்பது பாடலின் பொருள்.

முறைப்படி சிவபூசை செய்யும் வாய்ப்பு எமக்குக் கிடைக்குமோ என்று சிவபூசையின் பெருமையைக் கேட்டவர்கள் ஏங்குவார்கள் என்று பாடலில் வருவதுதான் உயிரோட்டமான பகுதி. அந்த ஏக்கத்தை நிறைவு செய்து முறைப்படி சிவபுஜீசை செய்வதை அன்பர்களுக்கு விளக்க எழுந் ததே இந்நூல். இதன் தனிச் சிறப்பு இது தமிழில் ஆற்ற உதவுவது தான்.

இனி, முறைப்படி என்று இங்கே கூறியது சிவாகம முறைப்படி என்று பொருள் தரும். ஆகம முறைப்படி அருந்தமிழ் மந்திரங்களால் ஆற்ற வழிகாட்டுவதால் "செந்தமிழ் சிவாகமபூசை" என்ற தலைப்பைப் பெற்று இந்நூல் எழுந்துள்ளது.

இனி, சிவபூசை செய்வதை மூன்று வகையாக சிவாகமங்கள் விரிக்கின்றன.

1. சுத்த சிவபூசை (சிவ வணக்கம் மட்டும்)
2. கேவல சிவபூசை (ஜம்மூர்த்தமாக சிவ வணக்கம்)
3. மிச்சிர சிவபூசை (பலமூர்த்தங்கள் உடனாக சிவ வணக்கம்)

இதுபற்றி தமிழாகம திருமந்திர சிவபூசை என்ற நான்காவது வகையும் உண்டு.

1. **சுத்தசிவபூசை:** இந்தப் பூசையில் சிவன் மட்டும் வணங்கப் பெறும். அதுவும் லிங்க வடிவில் வணங்கப்படும். பாலிங்கங்களின் வழிபாடு இவ்வகையில் அடங்கும்.

2. **கேவலசிவபூசை:** கேவலம் என்ற வடமொழிச் சொல் தனி என்று பொருள்படும். இன்று வழக்கில் நாம் கேவலம் என்றால் ஏதோ இழுக்காக எண்ணி வழங்குகிறோம். அது இங்கே பொருந்தாது.

இங்கே தனி என்றது, சிவபெருமானின் சத்தி விரிவுகளை மட்டுமே அல்லாமல், வேறு கடவுள் இருப்புகள் எண்ணப்படாத தனி என்று பொருள் தரும்.

சிவன் ஒருவனே சத்தியாகவும், முருகனாகவும், கணபதியாகவும் விரிகிறான். உடனாக சிவபெருமானின் பேற்றதிகாரம் பெற்ற அடியவர் ஒருவராக சண்டீசர் வணங்கப்படுவார். ஆக, சிவன், சக்தி, முருகன், கணபதி, சண்டீசர் ஆகிய ஐந்து மூர்த்தங்களாக சிவன் வணங்கப்படும் வழிபாட்டினை வடமொழியில் பஞ்சமூர்த்தி பூசை என்பர்.

**நெஞ்சம் அன்பு நிறைந்து நினைந்துமே**
**தஞ்சம் என்று சரண் அடைந்தார்களை**
**அஞ்சல் அஞ்சல்என்று அருள்செயும் ஆளுடைப்**
**பஞ்ச மூர்த்தி பதம்பணி வாமரோ**

என்று ஒரு பழம்பாடல் இதைத் தெளிவுபடுத்துகிறது. சிவன்கோயில் உற்சவங்களில் கூட ஒரு நாள் பஞ்சமூர்த்தி பவனி வரும். அது இதை உறுதி செய்வது.

3. **மிச்சிர சிவபூசை:** இது கதிரவன் பூசையில் தொடங்கி சண்டே சுவர பூசையில் முடிவது. மிக மிக விரிவானது. சிவாகமங்களில் ஒவ் வொன்றும் ஒவ்வொரு வகையில் இந்த விரிவைச் செய்து மேற் கொள்ளுகின்றது. இதை எல்லாம் ஒற்றுமைப்படுத்தி அகோர சிவாச் சாரியார் வழிபடுமுறை (பத்ததி) என்று பிற்காலத்தில் எழுந்தது. அதை மேற்கொண்டு ஐந்து சுற்றுக்களில் பல கடவுளர்களை உடனாக வைத்து வணங்குவதுதான் மிச்சர சிவபூசை.

ஆக சற்றுச் சுருக்கமாகச் செய்யும் பூசை சுத்தசிவ பூசை அதனைச் சற்று விரித்து, விரித்தாலும் சிவனை மட்டும் தனியே வணங்குவது கேவல சிவபூசை அடுத்து பல கடவுளர்களையும் சிவபெருமான் உடன் கூட்டிச் செய்யப்படும் சிவபூசை மிச்சிர சிவபூசை.

இந்த கேவல சிவபூசை – வகை, மிச்சிர சிவபூசை -

# சுத்த சிவபூசை

## படலம் – 2

சுத்தசிவபூசையும் இரண்டு வகைப்படும்

1. பாணலிங்க பூசை (அ) சுயம்பு லிங்க பூசை
2. ஏனைய லிங்க பூசை

பாணலிங்க பூசைக்கு ஆவாகனம் என்ற சடங்கு தேவையில்லை. காரணம், அந்த லிங்கத்தில் இறைவன் தானாகவே தோன்றி எப்போதும் அதில் வீற்றிருப்பான். இதே போன்று சுயம்பு லிங்கங்களிலும் இதே காரணத்தால் ஆவாகனம் செய்ய அவசியமில்லை.

ஏனைய விக்கிரகங்களில் ஆவாகனம் செய்து தான் வழிபாடு களைத் தொடங்க வேண்டும். ஆவாகனம் என்பது எழுந்தருளுதல் என்று பொருள்படும். இறைவனை நாம் எதில் வைத்து வணங்கி நினைக் கின்றோமோ அதில் முதலில் எழுந்தருளுவித்து அப்புறம் வழிபாட்டினைத் தொடங்க வேண்டும்.

இப்போது ஒரு கேள்வி எழும். எங்கும் நிறைந்த இறைவனை ஆவாகனம் செய்ய அவசியம் என்ன?

எங்கும் நிறைந்திருப்பது ஒன்று நிறைந்து நின்றது வெளிப்பட்டுத் தோன்றுவது ஒன்று.

இதற்கு இரண்டு உதாரணங்களைப் பெரியோர்கள் எடுத்துரைக் கின்றனர். ஒன்று அரணிக்கட்டை, இரண்டாவது பால்.

பழங்காலங்களில் அரணிக் கட்டைகளை உரசி நெருப்பை உரு வாக்கினார்கள். நெருப்பு எப்படி அந்த அரணிக் கட்டையிலிருந்து வந்தது? நெருப்பு அந்தக் கட்டையில் நிறைந்திருந்தது ஆனால் தெரியவில்லை. கட்டையை உரச நெருப்பு வெளிப்பட்ட போது தான் கடைக்குள்ளே




நெருப்பு உறைந்திருந்தது தெரியவந்தது. ஆக, நெருப்பு அரணிக் கட்டையில் நிறைந்து மறைந்திருந்த நிலை ஒன்று, நெருப்பு உறைந்து மறைந்திருந்த நிலைமாறி கட்டையிலிருந்து வெளிப்பட்ட நிலை மற்றொன்று.

அதுபோல இறவைன் எல்லாப் பொருள்களிலும் நிறைந்து மறைந்திருக் கும் நிலை ஒன்று வேண்டிய பொருளில் மறைந்து நிறைந்திருந்த நிலையிலிருந்து வெளிப்பட்டுத் தோன்றும் நிலை மற்றொன்று. அரணிக் கட்டையை உரசி நெருப்பு தோற்றுவிக் கப்படுதல் போல பயன்படுவது ஆவாகன மந்திரம்.

மற்றொரு உதாரணமான பாலை எடுத்துக் கொள்வோம். பாலிலிருந்து தான் நெய் வருகிறது. ஆனால் பாலாக இருக்கும் போது அதனுள் கலந்து நிற்கும் நெய் தெரிவதில்லை. பாலைப் புரைக்குத்தி அல்லது எலுமிச்சை சாறு போல புளிப்புத் துளிகளை விடுத் திரித்துத் தயிராக்கி, தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்து வெண்ணெயைக் காய்ச்சினால் நெய் கிடைக்கிறது. ஆக பாலைத் திரித்துச் செய்ய வேண்டியவைகளைச் செய்தால் நெய் வெளிப்படுகிறது. அது போன்று செய்ய வேண்டிய எழுந்தருளுவிக்கிற மந்திரங்களை உச்சரித்தால் இறைவன் வேண்டிய பொருளில் முன்னிற்பான்.

**விறகில் தீயினன் பாலில்படு நெய்போல்**
**மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்**
**உறவுக் கோல்நட்டு உணர்வுக் கயிற்றினால்**
**முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே**

என்று விறகாகிய அரணிக்கோட்டை, பால் ஆகிய இரண்டு பொருள் களையும் உதாரணம் காட்டி அப்பர் சுவாமிகள் இறைவனை எழுந் தருளிவிப்பது எப்படி என்றும் அதன் அவசியத்தையும் எடுத்துரைக்கிறார்.

ஆக மறைய நின்றுள சோதிப்பரம் பொருளான இறைவனை உரிய முறையில் கடைய அவன் முன்னின்று அருள்புரிவான் என்பதே ஆவாகனத்தின் அடிப்படை.

கடைதலாவது இறைவனோடு உறவு கொண்டு உணர்வினால் இறைவனை எழுப்புவது. இதுவே ஆவாகனம், எழுந்தருளுவித்தல், முன்னிற்கச் செய்தல் என்றெல்லாம் கூறப்படும். மூன்றும் ஒரே பொருள் உடைய சொற்கள்.

இச்செயல் நான்கு கட்டங்களில் செய்யப்படும்.

1. இது, உயிரானது இறையருளில் நாட்டம் பெற்று உறவு பூண்டு உணர்வினால் இறையருளில் அழுந்தி நிற்றல் இது வடமொழியில் ஆவாகனம் எனப்படும்.

2. உணர்வில் நின்ற பரம்பொருளை எதிரில் வழிபட வேண்டிய பொருளின் வடிவில் உருவெழுதித் திரளச் செய்து (இங்கே சிவலிங்கமே அந்தப் பொருள் என்க) அதில் முழு ஆற்றலுடன் வழிபடுவதற்கு ஏற்ப எழுந்தருளுதல் வேண்டும்என்று விண்ணப்பித்து உள்ளத்தில் அதனை உறுதிப்படுத்துதல். இதனை வட மொழியில் ஸ்தாபனம் என்பர்.

3. உள்ளத்தில் எழுதிய உருவமாகிய சிவலிங்கத்தை ஆண்டானாகவம். தான் அதற்கு அடிமை என்றும் உணர்ந்து எதிரில் உள்ள சிவலிங்கத்தில் அதை எழுப்பி மலர் சொரிதல் முன்னிற்கச் செய்தல் ஆகும். இதனைச் சந்நிதானம் என்று வடமொழியில் கூறுவர்.

4. எதிர் நின்ற சிவலிங்கத்தில் பரம்பொருள் விளங்கி நிற்க, அந்த விளக்கத்தை வழிபாடு செய்யும் வரை எந்த அசுத்தமும், தீய சக்தியும் வந்து அணுகிவிடாமல் சிக்கெனப் பிடித்துக் கொள்ளுதல் முன்னிலைக் காப்பு ஆகும். இதனை சந்நிரோதானம் என்று வடமொழியில் கூறுவர்.

ஆக, ஆவாகனம் செய்யும் செயல்கள் நான்கு

1. உணர்வோங்கல் (ஆவாகனம்)
2. உள்ளத்தில் உருக்கொடுத்தல் (ஸ்தாபனம்)
3. உருவை முன்னிறுத்தல் (சந்நிதானம்)
4. முன்னின்ற இறைவிளக்கத்தை காத்தல் (சந்நிரோதானம்)

இந்த நான்கையும் அப்பர் சுவாமிகள் தனது பாடல் ஒன்றில் அழகு தமிழில் குறிப்பிட்டுள்ளார். பாடல் வரிகள் வருமாறு:

**“உயிராவணம் இருந்து உற்று நோக்கி**
**உள்ளக் கிழியில் உருவெழுதி**
**உயிராவணம் செய்திட்டு உன்கைத் தந்தால்**
**உணரப் படுவாரோடு ஒட்டி வாழ்தி”**

உள்ளத்துள்ளே உற்றுநோக்கல் ஆவாகனத்தைக் குறிக்கும். உற்று நோக்கலால் உணர்வு ஓங்கும். உணர்வாய் நின்ற இறைவனை உள்ள மாகிய கிழியில் அதாவது துணியில் வேண்டிய உருவில் எழுதுதல் ஸ்தாபனத்தைக் குறிக்கும். அதன்பின் எழுதிய உருவில் நிற்கும் இறை வன் ஆண்டான், அவனை வழிபடும் தான் அடிமை என்ற உணர்வோடு கைத்தருதல் என்பது எதிர்முகமாக்கி முன்னிற்கச் செய்தலாகிய சந்நிதானம் என்பதைக் குறிக்கும். அடுத்து பெய்த உருவில் நிற்கும் இறையருள் விளக் கத்தை உண ராது மாறான உணர்வு அலைகளைப் பரப்பும் பிறரிட மிருந்து அந்த தீய சக்திகளிடமிருந்து காக்க அந்த உருவில் இறைவனைச் சிக்கெனப் பிடித்துக் காத்தல் என்னும் சந்நிரோதானத்தைக் குறிக்கும்.

இவ்வாறு “உற்றுநோக்கி” என்று ஆவாகனத்தையும் “உள்ளக் கிழியில் உருவெழுதி” என்று ஸ்தாபனத்தையும், “உயிராவணம் செய்திட்டு உன்கைத் தந்தால்” என்று சந்நிதானத்தையும், “உணரப் படுவாரோடு ஒட்டி வாழ்தி” என்று சந்நிரோதானத்தையும் என இரண்டு வரிகளில் ஆவாகனச் செயல் நான்கையும் கூறிய அப்பர் சுவாமிகளின் அருந்தமிழ் ஆற்றலே ஆற்றல்!

“விறகில் தீயினன்” என்ற பாட்டில் ஆவாகனத்தின் பொருளைக் கூறிய அப்பர், “உயிராவணமிருந்து” எனத் தொடங்கும் பாட்டில் ஆவாகனச் செயல் நான்கைக் கூறிய அற்புதமே அற்புதம்! நம் சமய குரவர்களின் பெருமைக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்பதை தெள்ளிதின் உணர்கிறோம்.

இனி, இந்நான்கு ஆவாகனச் செயல்களையும் செய்து சிவலிங்கத்தில் இறைவனை நிலைநிறுத்திய பின் ஏனைய வழிபாடுகளைத் தொடங்க லாம். இந்த நான்கும் தான் தோன்றி லிங்கம் (சுயம்பு லிங்கம்) மற்றும் பாணலிங்கத்தில் இயல்பாகவே விளங்கி நிற்பதால் அவற்றில் இவை தேவையில்லை என்பது இப்போது நன்கு விளங்கும்.

இனி ஏனைய இலிங்கங்களில் மேற்கூறியவாறு ஆவாகனச் செயல்கள் செய்வதற்கு முன் பூசகர் செய்ய வேண்டிய முன்னேற்பாடுகள் சில உள்ளன.

## குளிக்கும் முறை

சிவபூசையைக் குளித்துவிட்டுத் தான் செய்ய வேண்டும் என்பதில் மாற்றுக் கருத்து இருக்க இயலாது. "புறந்தூய்மை நீரான் அமையும" என்பது வள்ளுவர் வாக்கு. குறிப்பதற்காக எடுத்தநீர் எதுவானாலும், அது எந்தக் கலன் ஆனாலும், அந்தக் கலனில் உள்ள நீரைப் பதாகை முத்திரையால் மூடவேண்டும். பதாகை முத்திரை என்பது

**"ஓரித் திடுகரம் உறநிமிர்த்து ஐவிரல்**
**பாரித் திணைப்பது பதாகை முத்திரையே"** - முத்திராட்சணம்

என்று முத்திரை விளக்க நூற்பா ஒன்று கூறுகிறது. ஐந்து விரல் களையும் இணைத்து நிமர்த்தி அதனால் மூடுவது பதாகை முத்திரை. இம்முத்திரை யைக் காட்டும் போது பாட வேண்டிய பாடல்.

**ஏவியிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின்றேனை**
**இப்பிறவி யறுத்தேற வாங்கி ஆங்கே**
**கூலியமர் உலகனைத்தும் உருவிப் போக**
**குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலும்**

**தாவிமுதல் காவிரிநல் யமுனை கங்கை**
**சரசுவதி பொற்றாமரைபுட் கரணி தெண்ணீர்க்**
**கோவியொடு குமரிவரு தீர்த்தம் சூழ்ந்த**
**குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்தனாரே** - அப்பர்

தீர்த்தம் என்பது தூய தமிழ்ச்சொல். பாவங்களைக் கழுவித் தீர்ப்பது தீர்த்தம். குருவும் கடவுளும் நமது பாவங்களைத் தீர்ப்பதால் அவர்களுக் குத் தீர்த்தர் என்று பெயர். "ஆர்த்த பிறவி துயர்கெட நாம் ஆர்த்தாடும் தீர்த்தன்" என்ற மணிவாசகர் வாக்கு காண்க. தமிழ்ச் சொல்லிலிருந்து அப்படியே எடுத்துத் திரித்து வட மொழியில் குருமார்களை தீர்த்தங்கரர் என்று கூறுவதும் காண்க.

மேற்கூறிய நதிகள் எல்லாம், அதாவது பாடலில் கூறப்படும் காவிரி, யமுனை, கங்கை, சரசுவதி, புட்கரணி, கோதாவரி, குமரியாறு ஆகிய ஏழும் தீர்த்தங்கள் எனப்படும். இவை புறத்தூய்மையை நல்குவதோடு பாவங்களையும் தீர்க்கும் என்பது தொன்று தொட்டு வரும் நம்பிக்கை.

எனவே, எடுத்த நீரில் அந்த ஏழு நதிகளும் கலந்ததாகப் பாவிக்க மேற்கூறிய திருமுறைப்பாடலை ஓதுக.

அந்தத் தீர்த்தத்தில் குவளையை இட்டு எழுநதிகளும் வந்ததாக உறுதிப்படுத்தும் பாவனையாக எழுமுறை நீரை எடுத்து விடுக. பின்னர், அந்த நீரில் **"ஓம்"** என்று எழுதி **"ஓம் நீரிடை நான் காய் நிகழ்ந்தாய் போற்றி"** என்று ஓதுக. இப்போது அது பாவங்களைப் போக்கும் மந்திர ஆற்றல் பெற்றது.

இந்த நீரால் குளித்துவிட்டு, இறுதியில் ஒரு குவளையில் நீரை எடுத்துக் கொண்டு அதில் "ஓம் சிவாயநம" என்று எழுதுக. அந்த நீரை எடுத்து ஊற்றிக் கொள்ளுமுன் வரும் பாடலை ஓதுக.

**காதார் குழையாட பைப்பூண் கலனாடக்**
**கோதை குழலாட வண்டின் குழாமாட**
**சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி**
**வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடி**
**சோதித் திறம்பாடி சூழ்கொன்றைத் தார்பாடி**
**ஆதித் திறம்பாடி அந்தமா மாபாடிப்**
**பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்**
**பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய்!** - திருவெம்பாவை

இதில் உயிரோட்டமானது இறுதி இரு வரிகள். இதை ஓதி இறுதியாகத் தலையில் நீரை ஊற்றினால் சத்திநிபாதம் அமைந்ததாகப் பொருள். இப்பாவனை முற்ற ஒரு நாளில் அது நிகழ்ந்தே விடும்.

இனி பூசை அறைக்குச் சென்று வழிபாட்டுச் சடங்குகளைத் தொடர்க. அவற்றை எண்ணிக்கையிட்டு இனி காண்போம்.

### வழிபாட்டு முறை 1

மனவுரு (ஆன்ம தத்துவம்) வித்தியாதத்துவம் (அறிவுரு) ஆகிய இரண்டையும் கடந்து சிவதத்துவம் (சிவவுரு) ஐந்தின் அடியாகிய சுத்தவித்தை (தூய அறிவு) தத்துவத்தை (மெய்க் கூறினை) சிந்தையால் சென்றடைந்து அதையே மணையாக இட்டதாகப் பாவித்து,

**"மேவுமித் தூய அறிவது பக்குவ**
**ஆவிகட் குயர்சிவ ஞானம் அளிக்க"** - சதாசிவ தழுவல்

என்று ஓதி மணையில் அமர்க. உத்தூளனமாக விபூதி அணிக.
உரிய பாடல்:

**கங்காளன் பூசம் கவசத் திருநீற்றை**
**மங்காமல் பூசி மகிழ்வீரே யாமாகில்**
**தங்கா வினைகளும் சாரும் சிவகதி**
**சிங்கார மான திருவடிசார்வரே** - திருமந்திரம்

கண்மணி (உருத்திராக்க) மாலை அணிக: பாடல்

**ஆயிரம் கலனுடன் பனைத்தும் தாங்கினும்**
**மாயிரும் பொறையலால் வருவதுண்டு கொல்**
**நாயகன் விழிமணி ஒன்றுவோர் நாளுடல்**
**மீளணிந்திடில் வினையாவும் வீயுமே.**

### வழிபாட்டு முறை 2 : மோதகக்குட்டு

**"இடையிங் கலையின் எழுத்தறி வித்துக்**
**கடையிற் சுழிமுனைக் கபாலமும் காட்டுக"** - விநாயகர் அகவல்

என்று ஓதி மோதகக் குட்டு இயற்றுக.

## வழிபாட்டு முறை 3 : குரு வணக்கம்

**"என்னையிப் பலத்திற் சேரா வகையெடுத் தென்சித்தத்தே**
**தன்னைவைத் தருளி னாலே தத்துவ சுத்தி செய்து**
**முன்னையான் ஈட்டிக் கொண்ட மேல்வினை மூட்டை தீய்த்து**
**மன்னிவந் தென்னைக் காத்த மாநுடச் சிவமே போற்றி"**

என்ற இப்பாடலை ஓதி **"கோகழி ஆண்ட குருமணி போற்றி"** என்ற போற்றி கூறி தனக்கு வாய்த்த (அ) தீக்கை செய்த குருவை வணங்கிக் கொள்க.

## வழிபாட்டு முறை 4 : மூச்சுத் தூய்மை (பிராணாயாமம்)

வலது கை நடுவிரலை கட்டை விரலைத் தொடும்படி மடித்துக் கொள்க. கட்டை விரலால் மூக்கின் வலப்பாகத்தை அழுத்தி மூடுக. பின்னர் இடப்பாகத் தொளை வழியாக மூச்சினை இழுத்து உடனே கட்டை விரலை எடுத்து வலது தொளை வழியாக வேகமாக விடுக. விடும்போது "ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக" என்று ஓதுக. இதேபோன்று இடப்பாக மூக்கினை மோதிரவிரலால் அழுத்தி மூடியபடி கட்டை விரலை வலப்பாக மூக்கினின்று எடுக்க. பின்னர் வலப்பாகம் வழியாக மூச்சை இழுத்து இடத்தொளை வழியாக மூச்சை வேகமாக விடுக்க. விடும்போது, "ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக" என்று ஓதுக. இதனால் மூச்சு தூய்மை செய் யப்படுகிறது.

இதன் பின்னர் முன்போல் வலதுபாக மூக்கினைக் கட்டை விரலால் அழுத்தி இடத்தொளை வழியாக மூச்சை முடிந்த மட்டும் வேகமாக இழுத்து உள்ளே நிறுத்துக. உள்ளே அம்மூச்சு மூலா தாரத்திற்குச் சென்றதாகவும் அங்கே உள்ள குண்டலினி சக்தியைத் தூண்டி எழுப்புவ தாகவும் பாவனை செய்து உருவிரி மந்திரங்களை அதாவது தமிழ்ச் சம்மிதா மந்திரங்களை ஓதுக. அவை கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றை ஓதி முடித்த பின்னர் மூச்சினை வலப்பாக நாசி வழியாகக் கட்டை விரலை எடுத்து விடுக.

பின்னர் மோதிர விரலால் இடப்பாக நாசியை அழுத்திப் பிடித்துக் கொண்டு வலப்பாக நாசி வழியாக மூச்சை இழுத்து முன்போல் மூலாதாரத்தில் நிறுத்தி சம்மிதா மந்திரங்களை ஓதி இடப்பாக நாசி

வழியே வெளிவிடுக. பின்னர் வலது காதில் வலது உள்ளங்கையை வைத்து மூடி மூன்றுமுறை **"ஓம் சிவாயநம"** என்று தனக்கு மட்டும் கேட்கும்படி உச்சரிக்க. இது காதிற்குள்ளேயே எதிரொலிப்பதைக் கேட்க. இத்துடன் மூச்சுத்தூய்மை நிறைவேறியது. உடன் பாட வேண்டிய பாடல்

**"ஊனில் உயிரிப்பை ஒடுக்கி ஒண்சுடர்**
**ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்து**
**ஏனை வழிதிறந்து ஏத்துவார்க்கு இடர்**
**ஆன கெடுப்பன அஞ்செழுத்துமே"**

**இணைப்பு :** இனி பூசை மற்றும் அனுட்டானத்தில் பயன் படும் அடிப்படை மந்திரங்கள் கொடுக்கப்படுகின்றன. சம்மிதா மந்திரங்கள் உருவிரி மந்திரங்கள் எனப்படும். அவை சிவ மூல மந்திரத்தை விரித்து உருவைக் கொடுக்கும். முகம் 5 உறுப்பு 6 என அவை மொத்தம் 11 ஆகும். அடுத்து கலை மந்திரங்கள் 5. பிறகு, ஏழுகோடி மந்திரங்கள். அவற்றைத் தமிழில் கீழே கொடுத் துள்ளதைக் காண்க.

1. **ஐம்முக மந்திரங்கள் (பஞ்சப்பிரமமந்திரம் :-**
**ஓம் தனியொளித் தலைவா போற்றி (ஓம் ஈசான மூர்த்தியே நம)**
**ஓம் உயிரொளிர் பிரானே போற்றி (ஓம் தத்புருஷவக்தராய நம)**
**ஓம் அவிரொளி இயவுள் போற்றி (ஓம் அகோர இருதயாய நம)**
**ஓம் உமையொரு கூறா போற்றி (ஓம் வாமதேவ குஹ்யாய நம)**
**ஓம் மன்னொளி முதலே போற்றி (ஓம் சத்யோஜாத மூர்த்தியே நம)**

2. **ஆறு உறுப்பு மந்திரங்கள் (சடங்க மந்திரம்):-**
**ஓம் இறைதிரு இதயமே போற்றி (ஓம் ஹ்ருதாயாய நம)**
**ஓம் இறைதிரு முகமே போற்றி (ஓம் சிரசே நம)**
**ஓம் இறைதிரு முடியே போற்றி (ஓம் சிகாயை நம)**
**ஓம் இறைதிரு வடிவே போற்றி (ஓம் கவசாய நம)**
**ஓம் இறைதிரு கண்ணே போற்றி (ஓம் நேத்ரோப்பாய நம)**
**ஓம் இறைதிரு கருவியே போற்றி (ஓம் அஸ்திராய நம)**

**3. கலை மந்திரங்கள்:**

**ஓம் கட்டுநீக்கற் கலையே போற்றி (ஓம் நிவிர்த்தி கலாயை நம)**

**ஓம் நிலைநிறுவற்கலையே போற்றி (ஓம் ப்ரதிஷ்டாகலாயை நம)**

**ஓம் பட்டறிவுக் கலையே போற்றி (ஓம் வித்யாகலாயை நம)**

**ஓம் அனைத்தமைதிக் கலையே போற்றி (ஓம் சாந்தி கலாயை நம)**

**ஓம் அனைத்தமைதிக்கப்பாற் கலையே போற்றி (ஓம் சாந்திய தீதகலாயை நம)**

**4. ஏழு கோடி மந்திரங்கள்:**

**போற்றி (நம)**

**தெறிக்க் சிலிர்க்க (பட்)**

**கடிதொழிக (ஹீம்பட்)**

**நிறைக் சூழ்க் காக்க (வௌஷட்)**

**நீங்குக் தன்மைமாறுக (வஷட்)**

**வருக் எழுந்தருளுக (ஸ்வாஹா)**

**பெறுக (ஸ்வதா)**

குறிப்பு: இம்மந்திரங்களையே சூழ்நிலைக்கு ஏற்ப மாறி மாறி அமைத்துக் கொண்டால் பூசையில் எல்லாக் கிரியை களையும் செய்யலாம்.

## வழிபாட்டு முறை 5 : எண்வகைத் தூய்மை

பஞ்ச பாத்திரத்தில் நீரை வார்க்க. வார்த்து கீழ்காணும் எண் வகைத் தூய்மைகளும் செய்க.

1) பார்வைத் தூய்மை (நிரீட்சணம்)

முதலில் வலது கை விரல்களை நீட்டி நேரே பிடிக்க. பின்னர் அவற்றில் மோதிர விரலை மட்டும் படிதால் சுண்டுவிரலுக்கும் நடுவிரலுக்கும் இடையே ஓர் இடைவெளி கிடைக்கும். இந்த இடைவெளி வழியாக வலக்கண்ணினாலும், இடக்கண்ணினாலும், நெற்றிக்கண் இருப்ப தாகப் பாவித்து அதனாலும் பஞ்சபாத்திர நீரைப் பார்க்க வேண்டும். பார்க்கும் போது **“ஓம்சிவாய நம”** என்று ஓதுக.

2) தெளித்தல் (புரோட்சணம்)

புருவநடுவில் அமுதம் ஒழுகுவதாகப் பாவித்து அதை வாரி எடுத்துப் பஞ்சபாத்திரத்தில் உள்ள நீரில் தெறிப்பது. மூன்று கைவிரல்களையும் குவித்துச் சேர்த்து சுண்டு விரலை மட்டும் விலக்கிப் புருவ நடுவில் ஒழுகும் அமுதத்தை வாரி பஞ்சபாத் திரத்தில் உள்ள நீரில் தெளிக்க. ஓதும் மந்திரம் "ஓம் இறைதிரு கருவியால் தெறிக்க"

3) தட்டல் (தாடனம்)

சுட்டு விரலை நீட்டிக் கம்பு போல் விறைக்கச் செய்து அப்படியே பஞ்சபாத்திரத்தை மூன்றுமுறை தட்டுக. தட்டும் போது ஓதும் மந்திரம் : **ஓம் இறைதிரு கருவியால் சிலிர்க்க.**

4) மூடிக்காத்தல் (அப்யுட்சணம்)

பதாகை முத்திரையால் பஞ்சபாத்திர நீரை மூடி, **"ஓம் இறைதிரு வடிவே சூழ்ந்து காக்க"** என்று ஓதுக.

5) முத்தாளம் (தாளத்ரயம்)

நீரைச் சுற்றியுள்ள தீய சக்திகளை மூன்று முறை வலது கை சுட்டு விரல் மற்றும் நடுவிரலைச் சேர்த்துப் பிடித்து இடது கை உள்ளங் கையில் தட்டி அகற்ற வேண்டும். ஓதும் மந்திரம் : **"ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக"**

6) சொடுக்கல் (சோடிகம்)

இது வலது கை நடுவிரலையும் கட்டை விரலையும் சேர்த்துச் சொடுக்குவது. இவ்வாறு பஞ்ச பாத்திரத்தைச் சுற்றிச் சொடுக்குதல் வேண்டும். ஓதும் மந்திரம் **"ஓம் இறைதிரு கருவியால் விரைந்தோடுக"**

7) காப்பு வட்டம் (அவகுண்டனம்)

இது நீரை அரண் செய்வது. சுட்டு விரலை நீட்டி மற்றவிரல் களை மடித்து பஞ்சபாத்திரத்தில் நிரப்பி உள்ள நீரில் பாத்திர விளிம்பை ஒட்டி சுட்டுவிரலால் வட்டமிட வேண்டும். ஓதும் மந்திரம்: **"ஓம் இறைதிரு வடிவே சூழ்ந்து காக்க"**

8) அமுதமயமாக்கல் (அமுதீகரணம்)

பசுவின் மடிபோலக் கைவிரல்களை நீரில் கவிழ்த்துக் காட்டி, **"ஓம் சிவாமுதம் பொழிக"** என்று ஓதுக. இதற்கு தேனு முத்திரை என்று பெயர்.

**இரு கைகள் கூட்டி இடையிடைச் சேர்த்திடும்**
**விரல்களில் தர்ச்சனி விரல்கனிட் டைகளைப்**
**பார்த்திடும் மத்தியை அநாமிகை களினால்**
**சேர்த்துப்றப் பிடிப்பது தேனு முத்திரை** - முத்திரா லட்சணம்

தர்ச்சனி விரல் - மோதிரவிரல் கனிட்டை - சுண்டுவிரல்;
மத்திமை - நடுவிரல்; அநாமிகை - ஆள்காட்டி விரல்

## வழிபாட்டு முறை 6 : இறைதிரு கருவி எழுப்பல்

தினைநீர்க் கரண்டி (உருத்திரிணி)யில் பஞ்சபாத்திர நீரை முகந்து அதனை இடக்கையால் வலக்கையின் உள்ளங்கையில் விட்டு ஒழுகும் நீரை நீட்டிய சுட்டுவிரல் வழியாகச் சாய்த்துப் பிடித்து மும்முறை தட்டில் ஒழுக்குக. அது போழ்து **"ஓம் இறைதிரு கருவியே வருக"** என ஓதுக.

உடன் பாட வேண்டிய பாடல்:

**படைக்கலமாகவுன் நாமத் தெழுத் தஞ்சும் என் நாவில்கொண்டேன்.**
**இடைக்கலம் அல்லேன் ஏழுபிறப்பும் உனக்கே ஆட்செய்கின்றேன்.**
**துடைக்கினும் போகேன் தொழுது வணங்கித் தூநீ றணிந்துன்**
**அடைக்கலம் கண்டாய் அணிதில்லைச் சிற்றம்பலத் தரனே.** - அப்பர்

## வழிபாட்டு முறை 7 : உடல் பொருள் ஆவி ஒப்படைப்பு

உடல் - ஆன்மதத்துவம் பொருள் - வித்தியாதத்துவம் ஆவி - சிவதத்துவம் உடல் - மனவுரு பொருள் - அறிவுரு; ஆவி - சிவவுரு என்றும் கூறுவர். வழிபாட்டிற்கு முன் இம்மூன்றையும் இறைவனிடம் ஒப்படைத்து விட வேண்டும். தினைநீர்க் கரண்டியில் நீரை எடுத்து வலது உள்ளங்கையில் விட்டு மும்முறை பருகுக. ஓத வேண்டிய மந்திரங்கள்.

**"ஓம் எல்லாம் வல்ல இறைவற்க என் மனவுருவை ஒப்படைக்கின்றேன்"**
**ஓம் எல்லாம் வல்ல இறைவற்கு என் அறிவுருவை ஒப்படைக்கின்றேன்"**
**ஓம் எல்லாம் வல்ல இறைவற்கு என் சிவவுருவை ஒப்படைக்கின்றேன்'**

## வழிபாட்டு முறை 8 : தொடுமிடம்

வலது கை கட்டை விரலையும் மோதிர விரலையும் சேர்த்து அந்நிலையில் (திவ்விய முத்திரை) தலை உச்சிக்கு மேல், இடக் கண், வலக்கண், மூக்கின் இடப்பாகம், வலப்பாகம், வலச்செவி, இடச்செவி, கண்டம், இதயம், நாபி, வலத்தோள், இடத்தோள், வல முட்டி, இடமுட்டி ஆகிய இடங்களில் தொடுக. தொடும் போது ஒவ் வொரு முறையும் **"ஓம் இறைதிரு இதயமாய் நிறைக**" என்று ஓதுக.

இதனால் கையிலும், உடலுறுப்புகளிலும் இறைவனைப் பின்னே வரும் இடங்களில் பதிப்பதற்கு ஏற்ப அவ்விடங்கள் தூய்மை ஆகின்றன.

## வழிபாட்டு முறை 9 : கைத்தூய்மை

இனி வலது கையை நீட்டிப் பிடித்து இடது உள்ளங்கை மற்றும் விரல்களோடு தடவிச் சுத்தம் செய்க. ஓதும் மந்திரம் **"ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக".**

இதே போல் இடதுகை புறங்கையையும் நீவிச் சுத்தம் செய்க. இவ்வாறு சுத்தம் செய்யப்பட்ட இடது கையால் மீண்டும் வலது கையை முன்போல் சுத்தம் செய்க. மீண்டும் வலது கையால் முன்போல் இடது கையைச் சுத்தம் செய்க.

## வழிபாட்டு முறை 10 : விபூதித் தூய்மையும் தரித்தலும்

நந்தி முத்திரையால் எடுக்கப்பட்ட விபூதியை இடது உள்ளங் கையில் **"ஓம் இறைதிரு இதயமாய் நிறைக**" என்று ஓதி வைக்க. பின் அதனை நீரால் தூய்மை செய்யும் பாவனையாக ஒரு துளி நீரை விபூதியின் மீது தெளிக்க பின்னர் ஒரு துளி விபூதியை எடுத்துத் தென்மேற்கு திசையில் தெறிக்க. ஓதும் மந்திரம் **"ஓம் இறைதிரு கருவியால் கடிதொழிக"** இது விபூதியில் உள்ள கெட்ட பகுதியை எடுத்தெறிதல் ஆம்.

பின்னர் வழக்கம் போல், பார்வைத் தூய்மை, தெளித்தல், தட்டல், காப்பு வட்டம் செய்தல் ஆகிய நால்வகைத் தூய்மைகளை முன்னே கூறியிருப்பது போலச் செய்க.

அதன்பின் பதாகை முத்திரையால் இடது கையில் உள்ள விபூதியை மூடி முன்னர் கொடுக்கப்பட்டுள்ள (வ.ம 4 இணைப்பு) கலை மந்திரங்களை ஓதுக.

பின்னர் இடதுகையில் விபூதிக்கு மேல் பதாகை முத்திரை இட்டவாறே வலது முழந்தாளில் வைத்து, உருவிரி மந்திரங்கள் பதினொன்றையும் ஓதுக.

அதன் பின்,

**மந்திரமாவது நீறு மானவர் மேலது நீறு**
**சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு**
**தந்திரமாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு**
**செய்துவர் வாயுமைப் பங்கன் திருஆலவாயான் திருநீறே.**

என்ற பாடலை ஓதுக. இயன்றால் “கருவாய்க் கிடந்துன்” எனக் தொடங்கும் திருமுறைப் பாடலையும், “சந்திரன் சடையில் வைத்த” எனத் தொடங்கும் திருமுறைப் பாடலையும் உடன் ஓதலாம்.

இதன் பின், மேற்கூறியவாறு மந்திரிக்கப்பட்ட விபூதியில் தினைநீர்க் கரண்டியால் நீரை வேண்டுமளவு விட்டுக் குழைக்க. நீரை விடும் போது **“ஓம் இறைதிரு கருவியால் நிறைக்க”** என்று ஓதுக. குழைக்கும் போது **“ஓம் இறைதிரு வடிவாய் நிறைக”** என ஓதுக. இனி குழைத்த விபூதியை மூவரிகளாக கீழ்வருமாறு தரிக்க.

**“ஓம் தனியொளித் தலைவா போற்றி” – உச்சியில் தெறிக்க**
**“ஓம் உயிரொளிர் பிரானே போற்றி” – நெற்றியில் இடுக**
**“ஓம் அவிரொளி இயவுள் போற்றி” – மார்பில் இடுக.**
**“ஓம் உமையொரு கூறா போற்றி” – நாபியில் இடுக.**
**“ஓம் மன்னொளி முதலே போற்றி”**

என்று ஓதிக்கொண்டே வலத்தோள், இடத்தோள், வலது முழங்கை, இடது முழங்கை, வலது மணிக்கட்டு, இது மணிக்கட்டு, வலது முட்டி, இடது முட்டி, வலது பிடரி, இடது பிடரி இடுப்பின் பின்பக்க முதுகுப் பாகத்தில் வலது, இடது பக்கங்கள் ஆகியவற்றில் குழைத்த விபூதியை இடுக. ஆக உடலில் பதினாறு இடங்களில் விபூதியைக் குழைத்து இவ்வாறு இட வேண்டும்.

**வழிபாட்டு முறை 11 : உள்குதல் (தியானம்)**

உரிய பாடல்:

**உயிரா வணமிருந் துற்று நோக்கி உள்ளக் கிழியின் உருவெழுதி**
**உயிரா வணம்செய்திட் டுன்கைத்தந்தால் உணரப் பாடுவாரோடு ஒட்டிவாழ்தி**
**அயிரா வணம் ஏறாது ஆனேறேறி அமரர் நாடாளாதே ஆரூர் ஆண்ட**
**அயிரா வணமே என் அம்மானே நின் அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே!**

இப்பாடலை ஓதி இரண்டு நிமிடம் கண்களை மூடி உள் குதலாம் தியானம் செய்க,

**வழிபாட்டு முறை 12 : மெய்யொன்றல் (சகளீகரணம்)**

1) பொது

**ஒன்றிய வாறும் உடலின் உடன்கிடந்து**
**என்று நம் ஈசன் நடக்கும் இயல்பது**
**தென்றலைக் கேற திருந்து சிவனடி**
**நின்று தொழுதேன் என நெஞ்சத்தின் உள்ளே!**

2) கையிற்பதித்தல் (கரநியாசம்)

முதலில் இரு கட்டை விரல்களும் உள்ளங்கையில் தொட்டிருக்க இரு கைகளையும் கூப்பி **“ஓம் சக்தியே நிறைக”** என்ற மந்திரத்தை ஓதுக.

ஓதியபின் இரு கரங்களையும் மலர்த்தி விரிக்க. அதாவது இடது உள்ளங்கை, சுண்டு விரல் ஆகியவை வலது உள்ளங்கை அதன் சுண்டு விரல் ஆகியவற்றுடன் ஒட்டியிருக்க ஒரு புத்த கத்தை விரிப்பது போல கரங்களை விரிக்க.

இப்போது இரண்டு கட்டை விரல்களாலும் இரண்டு உள்ளங்கை களிலும் **"ஓம் சிவத்திருவணையே போற்றி"** என்று ஓதித் தடவுக. மீண்டும் அங்ஙனம் தடவி **"ஓம் சிவாய நம"** என்று ஐந்தெழுத்தை ஓதி சிவபெரு மானை முன் கற்பித்த ஆசனத்தில் அமர்த்துக. இதன்பின் வலது மற்றும் இடது கட்டை விரல்களை "ஓம் தனியொளித் தலைவா போற்றி" என்று ஓதி சுட்டு விரல்களால் தடவுக. பின்

கட்டை விரல்களால் சுட்டு விரல்களைத் தடவி
**"ஓம் உயிரொளிர் பிரானே போற்றி" எனவும்,**
கட்டை விரல்களால் நடு விரல்களைத் தடவி
**"ஓம் அவிரொளி இயவுள் போற்றி" எனவும்,**
கட்டை விரல்களால் மோதிர விரல்களைத் தடவி
**"ஓம் உமையொரு கூறா போற்றி" எனவும்,**
கட்டை விரல்களால் கண்டு விரல்களைத் தடவி
**"ஓம் மன்னொளி முதலே போற்றி" எனவும் பதிக்கவும்,**
மீண்டும் கண்டு விரல்களை ஒட்டி வைத்துக் கையை
நிமிர்த்தி கட்டை விரல்களால் உள்ளங்கையைத் தடவி,
**"ஓம் பட்டறிவு மெய்யே போற்றி"** என்று ஓதிப்பதிக்க.

பின்னர் கண்டு விரல்களை ஒட்டி நிமிர்த்தி மற்ற மூன்று விரல்களையும் மடக்கிக் கட்டை விரல்களை நீட்டி
**"ஓம் இறைதிருக் கண்ணே போற்றி"** என்று ஓதுக.

இப்போது மீண்டும் உள்ளங்கைகளில் கட்டை விரல்கள் படகை களைக் குவித்து, "ஓம் சிவாய நம" என்று ஐந்தெழுத் தோதுக.

அதன் பின்,

கட்டை விரல்களால் கண்டு விரல்களை நீவி,
**"ஓம் இறைதிரு இதயமே போற்றி" எனவும்,**
கட்டை விரல்களால் மோதிரவிரல்களை நீவி,
**"ஓம் இறைதிரு முகமே போற்றி"** எனவும்,
கட்டை விரல்களால் நடுவிரல்களை நீவி,

**"ஓம் இறைதிரு முடியாய் மாறுக"** எனவும்,

கட்டை விரல்களால் சுட்டு விரல்களை நீவி

**"ஓம் இறைதிரு வடிவாய் நிறைக" எனவும்**

ஓதி இடக்கையை குறுக்காக நீட்டி அதனைக் குறுக்கே நீட்டிய வலக்கை யால் மும்முறை சுற்றுக. சுற்றும்போது **"ஓம் இறை திரு வடிவே சூழ்ந்து காக்க"** என்று ஓதுக. கரம்பதித்தல் நிறை வுற்றது.

3) உடலில் பதித்தல் (அங்கநியாசம்)

முதலில் வலது கை மோதிரவிரலையும் கட்டை விரலையும் சேர்க்க. இது திவ்விய முத்திரை எனப்படும். இம்முத்திரையால் இதயத்தைத் தொட்டு

**"ஓம் சிவத்திருவணையே போற்றி"** என ஓதுக.

பின்னர் அதே முத்திரையால் மீண்டும் இதயம் தொட்டு,

**"ஓம் சிவாய நம"** என ஓதுக.

பின்னர் வலதுகை கட்டை விரலால் உச்சியைத் தடவி,

**"ஓம் தனியொளித் தலைவா போற்றி"** எனவும்,

சுட்டுவிரலால் புருவ நடுவைத் தடவி,

**"ஓம் உயிரொளிர் பிரானே போற்றி" எனவும்,**

நடுவிரலால் இதயத்தைத் தடவி,

**"ஓம் அவிரொளி இயவுள் போற்றி" எனவும்,**

மோதிர விரலால் நாபியைத் தடவி,

**"ஓம் உமையொரு கூறா போற்றி" எனவும்,**

சுண்டுவிரலால் இரு முட்டிகளைத் தடவி,

**"ஓம் மன்னொளி முதலே போற்றி" எனவும் ஓதுக.**

பின்னர் திவ்விய முத்திரையால் இதயத்தைத் தொட்டு

**"ஓம் பட்டறிவு மெய்யே போற்றி" எனவும்**

அதே முத்திரையால் இட, வல, நெற்றிக் கண்ணைத் தடவி

**"ஓம் இறைதிருக் கண்ணே போற்றி" எனவும்**

அதே முத்திரையால் மீண்டும் இதயத்தைத் தடவி

**"ஓம் சிவாயநம எனவும் ஓதுக.**

பின்னர் இதயத்தில் கட்டை விரலுடன் சுண்டு விரலைச் சேர்த்துத் தடவி

**“ஓம் இறைதிரு இதயமே போற்றி”** என்று ஓதுக
பின்னர் திவ்விய முத்திரையால் புருவ நடுவில் தடவி,
**“ஓம் இறைதிரு முகமே போற்றி”** எனவும்
கட்டை விரலுடன் நடுவிரலைச் சேர்த்து உச்சியில் தடவிஷ
**“ஓம் இறைதிரு முடியாய் மாறுக”** எனவும் ஓதுக.

அதன்பின் வலது கை விரல்களைக் குவித்துக் கட்டை விரலை மட்டும் நீட்டி, நீட்டிய அக்கட்டை விரலால் வலது இடுப்பையும், இடப் பக்கம், இடதுகைக் கட்டை விரலால் இடது பக்க இடுப்பையும் தடவுக ஓதும் மந்திரம்: **“ஓம் இறைதிரு வடிவாய் நிறைக”.**

பின்னர் வலது கை மோதிர விரலால் இடது உள்ளங்கையையும், இடது கை மோதிர விரலால் வலது உள்ளங்கையையும் மாறி மாறித் தடவுக. தடவும் போது மந்திரம். **“ஓம் இறைதிருகருவி யால் ஏகுக”.**

உடன் முத்தாளம் முன் கூறியது போல செய்க. பின்னர் தலையைச் சுற்றி காதுக்கு காதாக சுற்றிச் சொடுக்கி **“ஓம் இறைதிரு கருவியால் விரைந்தோடுக”** என்று ஓதுக.

பின்னர் முகத்தை மேலிருந்து கீழாக இடது பாகத்திலும், கீழிருந்து மேலாக வலது பாகத்திலும் வலது சுட்டு விரலால் தொட்டபடி, சுற்றி **“ஓம் இறைதிரு வடிவே சூழ்ந்து காக்க”** என்று ஓதுக.

இதன்பின் வலதுகை வலது முழந்தாளிலும், இடது கை இடது முழந்தாளிலும் வைத்து இரு கைகளையும் ஒன்றாக நேரே மேலே உயர்த்துக. ஓதும் மந்திரம்: **“ஓம் சிவமே திகழ்க”** உடலிற் பதித்தல் நிறைவுற்றது.

## வழிபாட்டு முறை 13 : பொது அருள்நீர்

**அருள் நீர் வட்டில்கள் படத்தில் கண்டவாறு இருக்கும்.**



திவ்விய முத்திரையால் **“ஓம் இறைதிரு கருவியால் தெறிக்க“** என்று ஓதி வட்டிலில் உள்ள நீரில் தெளிக்க.

பின் **“ஓம் இறைதிரு இதயமாய் நிறைக்க”** என்று ஓதி நீரை வட்டிலில் நிரப்புக.

வட்டிலைத் தூக்கிப் புருவ நடுவரை சென்று காட்டி அங்கிருந்து அமுதம் பொழிந்ததாகப் பாவித்து வட்டிலைக் கீழ் வைக்க.

**“ஓம் சிவாயநம”** என்று ஓதி சந்தனம், பூ, அறுகு, மஞ்சளரிசி, ஆகியவற்றை வட்டில் நீரில் சேர்க்க.

பின் ஏழுமுறை “ஓம்” என்று ஓதி வட்டில்நீரை மலரால் அர்ச்சிக்க. அதன்பின் வட்டில் நீரை பதாகை முத்திரையால் மூடி **“ஓம் இறைதிரு வடிவே சூழ்ந்து காக்க**” என்று ஓதுக. மீண்டும் ஏழு முறை ஓங்காரத்தை ஓதுக.

வட்டிலைச் சுற்றிச் கொடுக்கி, “ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக” என்று ஓதி சுட்டு விரலை நீரைத் தொடும்படி வைத்துச் சுற்றியவாறு “ஓம்

இறைதிருவடிவே சூழ்ந்து காக்க" என்று ஓதி தேனு முத்திரை "ஓம் சிவா முதம் பொழிக" என்று ஓதுக. இந்த நீர் இனி சிவபூசையில் ஆங்காங்கே பயன்படும்.

## வழிபாட்டு முறை 14 : சிறப்பருள் நீர் (விசேடார்க்கியம்)

மூன்று வட்டில்களை எடுத்துக் கொள்க. நீரை நிரப்புக. இவற்றில் ஒன்று திருமுடிநீர் மற்றது திருவடிநீர் மூன்றாவது திருவாய் நீர். இவை முறையே அர்க்கியம், பாத்யம், ஆசமனம் என்று வடமொழியில் கூறப்படும்.

1) **திருமுடிநீர்:** வட்டிலை **"ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக"** என்று ஓதி சுத்தம் செய்க. பொது அருள்நீர்ப் பகுதியில் கூறியது போல் வட்டிலில் **"ஓம் இறைதிரு இதயமாய் நிறைக்க"** என்று நீரை நிரப்பி வட்டிலைப் புருவ நடுவிற்குக் கொண்டு சென்று அங்கிருந்து அமுதம் பொழிந்ததாகப் பாவித்துக் கீழே வைக்க **"ஓம் சிவாய நம"** என்று ஓதிய வண்ணம் பால், தர்ப்பை, அரிசி, சந்தனம், பூ, எள், கோதுமை, வெண்கடுகு இவற்றைச் சேர்க்க பின்னர்,

**"ஓம் சிவத்திருவணை போற்றி**
**'ஓம் சிவாய நம'**
**'ஓம் பட்டறவு மெய்யே போற்றி'**
**'ஓம் இறைதிரு இதயமே போற்றி'**
**'ஓம் இறைதிரு முகமே போற்றி'**
**'ஓம் இறைதிரு முடியே போற்றி'**
**'ஓம் இறைதிரு வடிவே போற்றி'**
**'ஓம் இறைதிரு கண்ணே போற்றி'**
**"ஓம் இறைதிரு கருவியே போற்றி'**

என்ற பாத்திரங்களை ஓதி மலரிட்டு அர்ச்சிக்க. உடன் பதாகை முத்திரையால் வட்டிலை மூடி மேலே கூறியவற்றை நிரலே மீண்டும் ஓதுக. பின் வட்டிலைச் சுற்றிச் சொடுக்கி **"ஓம் இறைதிரு கருவியால் விரைந் தோடுக"** என்று ஓதி வட்டில் நீரில் சுட்டுவிரலைத் தொட்டவாறு விளிம்பில் சுற்றி **"ஓம் இறைதிரு வடிவே சூழ்ந்து காக்க"** என்று ஓதி தேனு முத்திரை காட்டி **"ஓம் சிவாமுதம் பொழிக"** என்று ஓதுக.

**திருவடிநீர்** : வட்டிலை முன் திருமுடிநீர் ஆயத்தம் செய்தது போல் ஆயத்தம் செய்க. வேறுபாடு என்னவென்றால் நீரில் சந்தனம், விலாமிச்சை, அறுகு, வெண்கடுகு ஆகியவற்றைச் சேர்க்க வேண்டும் மந்திரங்கள் அவையே.

**திருவாய் நீர்:** முன் கூறிய அனைத்தும் அப்படியே. இந்த நீரில் சேர்க்க வேண்டிய பொருள்கள் ஏலம், கிராம்பு, சாதிக்காய், சாதிபத்திரி, வால்மிளகு, பச்சைக் கற்பூரம் ஆகியவை மந்திரங்கள் முன் கூறியவையே.

**வழிபாட்டு முறை 15 : மேற்கு வாயில் பூசை**

வாயிலின் மேல் நிலப்படியில் கீழ்க்கண்டவாறு வாயில் காவல் தேவர்கள் வாயிலைக் காப்பதாகப் பாவித்து அவர்களை வணங்கி மலர் சொரிக.

| கங்கை | ரூந்தி | விநாயகர் | திருமகள் | கலைமகள் | மகாகாளர் | யமுனை |
|---|---|---|---|---|---|---|
| ○ | ○ | ○ | ○ | ○ | ○ | ○ |

தெற்கு வடக்கு

இதற்கு மந்திரங்கள்:

**ஓம் ஆனைமுக இறவைா போற்றி**

**ஓம் கலைமகளே போற்றி**

**ஓம் திருமகளே போற்றி**

**ஓம் நந்தியே போற்றி**

**ஓம் மகாகாளரே போற்றி**

**ஓம் கங்கையே போற்றி**

**ஓம் யமுனையே போற்றி**

**வழிபாட்டு முறை 16 : திக்கனைத்திலும் இடர் நீக்கம்**

திவ்விய முத்திரையில் ஒரு பூவை எடுத்து இடது, வலது கண் களைத் தொட்டு மேலே பூவைத் தெறித்து, **ஓம் இறை திரு கருவியால் கடிதேகுக”** என்று ஓதுக.

பின்னர் நாராச முத்திரையால் இடது, வலது பக்கத்தில் மலர் களைத் தெறித்து முன்கூறிய மந்திரத்தை ஓதுக.

நாராச முத்திரையாவது இருகைகளையும் கட்டுவது போல் வைத்து இரு உள்ளங்கைகளிலிருந்தும் பூக்களை இரு பக்கங்களிலும் தெறித்தல்.

பிறகு **"ஓம் பாசு பத இறை திருகருவியே போற்றி"** என்று மும் முறை வலது பாதத்தால் தரையை தட்டுக. இதனால் நாலா பக்கங்களிலும் உள்ள இடர்களை நீக்கியவாறு ஆயிற்று.

## வழிபாட்டு முறை 17 : வாயிற் காவலர்களை வணங்கல்

**அன்றுய்ந்த மூவர்க்கு அமர்ந்து வரமளித்து**
**நின்றுய்ந்த வண்ணம் நிகழ்வித்து நன்று**
**நடைகாவல் மிக்க அருள் கொடுத்துகோயில்**
**கடைகாவல் கொண்டவா போற்றி போற்றி**

என்று ஓதி மலரை மேற்கு வாயிலில் சொரிக.

## வழிபாட்டு முறை 18 : திருமஞ்சன நீர் தயாரித்தல்

திருமஞ்சனத்திற்கு உகந்த கலன்களில் வேண்டிய அளவிற்கு நீரை எடுத்துக் கொண்டு, ஓதி அதில் மலர் சொரிந்து, பார்வைத் தூய்மை, தெளித்தல், தட்டல், மூடிக்காத்தல், காப்பு வட்டம் செய்தல் ஆகியவற்றை முன்கூறியவாறு செய்து அதில் உருவிரி மந்திரங்களை ஓதி மலரிட்டு, "ஓம் சிவாய நம" என்று ஓதி மலரிடுக. திருமஞ்சன நீர் ஆயத்தம் ஆகிவிட்டது.

## வழிபாட்டு முறை 19 : ஐந்தூய்மை (ஐவகைச் சுத்தி)

1) பூத சுத்தி (உடலுயிர் தூய்மை)
2) தானசுத்தி (அகத்தூய்மை)
3) திரவிய சுத்தி (பொருட்கள் தூய்மை)
4) மந்திர சுத்தி (மந்திரத் தூய்மை)
5) இலிங்க சுத்தி (இலிங்கத் தூய்மை)

1) உடலுயிர் தூய்மை ஐவகைப்படும்.

அ) ஆன்மத் தூய்மை

ஆ) நுண்ணுடல் தூய்மை

இ) பருவுடல் தூய்மை

ஈ) குற்றம் எரித்து அமுதூட்டல்

உ) உயிரை நாட்டல்

அ) உயிர் உடலோடு பொருந்தி இருக்கும் நிலையில் அதற்கு ஆன்மா என்று பெயர். இது தூய தமிழ்ச்சொல். இப்போது உயிர் தங்கி இருக்கும் உடலைத் தூய்மை செய்ய வேண்டுவதால் உயிரை உடலிலிருந்து தனித்தெடுத்து சிவனிடம் ஒப்படைத்ததாகப் பாவிக்க வேண்டும். பாவித்து உயிரைத் தூய்மை செய்தல் வேண்டும். இதுவே ஆன்ம சுத்தி எனப்படும் ஆன்மத் தூய்மையாகும்.

ஆன்மாவை எடுத்து சுழிமுனை நாடி வழியாக இதயம், கழுத்து, நாக்கின் அடி, புருவ நடு, உச்சித்துளை ஆகிய ஐந்து இடங்களில் தொட்டு அங்கங்கே உள்ளதாகப் பாவிக்கப்படும் கவிழ்ந்த தாமரை மொட்டுக் களை நிமிர்த்தி மலர்ந்ததாகப் பாவித்து வரும் திருமந்திரப் பாடலை ஓதுக.

**கழற்றிக் கொடுக்கவே சுத்தி சுழியும்**
**கழற்றி மலத்தை கமலத்தைப் பூரித்து**
**உழற்றிக் கொடுக்கும் உபாயம் அறிவார்க்கு**
**சுழற்றித் தவிர்ந்துடல் அஞ்சன மாமே!**

உடன், ஒரு பூவை எடுத்து முன் கூறிய ஐந்திடங்களிலும் தொட்டு வரும் திருமந்திரப் பாடலை ஓதுக.

**எல்லாக் கலையும் இடைபிங் கலைநடுச்**
**சொல்லா நடுநாடி ஊடே தொடர்மூலம்**
**சொல்லா எழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்**
**நல்லோர் திருவடி நண்ணி நிற்பாரே!**

**ஆ) நுண்ணுடல் தூய்மை:**

நம் தத்துவங்களையும் அவ்வவற்றின் காரணங்களில் ஒடுக்கு வது நுண்ணுடல் தூய்மை.

**அத்தன் அமைத்த உடலிரு கூறினில்**
**சுத்தமதாகிய சூக்குமம் சொல்லுங்கால்**
**சத்த, பரிச, ரூப, ரசகந்தம்**
**புத்திமா னாங்காரம் புரியட்ட காயமே**
**காயம் கடும்பரி கால் வைத்து வாங்கல் போல்**
**சேய இடம் அண்மை செல்லவும் வல்லது**
**காயத் துகிற்போர்வை ஒன்றுவிட் டாங்கொன்றிட்டு**
**ஏயும் அவரென்ன ஏய்ந்திடும் காயமே**

மேற்பாடல்களை ஓதி மலர்களைப் புருவ நடுவில் காட்டித் தம்மீது சொரிந்து கொள்க.

**இ) பருவுடல் தூய்மை**

நமது உடல் ஐம்பூதங்களின் மயக்கம், அதாவது கலவை, மண், புனல், காற்று, தீ, விண் ஆகிய ஐந்தும் நம் உடலில் உள்ளன. ஒவ்வொன் றையும் அவ்வவ்வற்றின் பகைப் பூதங்களில் ஒடுக்குவதாகப் பாவிக்க. மண்-வாய்வு வாயு புனல் புனல் - தீ தீ - நீர் காற்று - மண் விண் - நுண் .ணாகாயம் என முறையே ஒடுக்குக.

மலர் எடுத்து மார்பு, நெற்றி, உச்சந்தலை ஆகிய இடங்களில் தொட்டுத் தலை உச்சிக்கு பின்புறம் போடுக.

அப்போது ஓதவேண்டிய பாடல்:

**இருநிலனது புனலிடை மடிதர எரிபுக எரியது மிகு**
**வெருவெளியினில் அவிதர வளிகெட லியனிடை முழுவதுகெட**
**இவர்களுடல் பொறையொடு திரிஎழில் உருவுடை அவனினமலர்**
**மருவிய அறுபதமிசை முரல்வன மறைவனம் அமர்தரு பரமனே** - சம்பந்தர்

**ஈ) குற்றமெரித்து அமுதூட்டல்**

உடம்பில் கால்கட்டை விரல் முதல் தலை உச்சி வரை சிவ சத்தியால் அதிட்டிக்கப்பட்ட தீயானது பூத உடலின் குற்றங்கள் அனைத்தையும் சுட்டதாகப் பாவித்து உடம்பின் மீது மலர் தூவி வரும் மந்திரங்களை ஓதுக.

**ஓம் அண்டம் அடியுறை அழலே எழுக**
**ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக**

உடன் உடலில் அமுதத்தைப் பொழிவதாக பாவித்து மலரிட்டு வரும் திருவாசக வரிகளை ஓதுக.

**"வாக்கிறந் தமுதம் பயிர்க்கால் தோறும்**
**தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்தழை**
**குரம்பை தோலும் நாயுட லகத்தே**
**குரம்பை கொண்டு இன்தேன் பாய்த்தி நிரம்பிய**
**அற்புத மான அமுத தாரைகள்**
**எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவது**
**உள்ளம் கொண்டோர் உருச் செய்து ஆங்கெனக்கு**
**அள்ளூா றாக்கை அமைத்தனன்.**

**2) உயிர் நாட்டல்:**

ஆன்மத் தூய்மையில் சிவனிடம் ஒப்படைக்கப்பட்ட உயிரைத் தூய் மைப்படுத்தப்பட்ட உடலில் நிலை நாட்டுவதே இச்சடங்கு ஆகும்.

தலையுச்சியில் இருந்து பூவை எடுத்து இதயத்தில் வைத்து ஆன்மா அங்கே நிலைபெற்றதாக எண்ணி வரும் பாடலை ஓதுக.

**மனம்புகுந் தென்னுயிர் மன்னிய வாழ்க்கை**
**மனம்புகுந் தின்பம் பொழிகின்ற போது**
**நலம்புகுந் தென்னொடு நாதனை நாடும்**
**இலம் புகுந் தாதியும் மேற்கொண்ட வாறே!** - திருமந்திரம்

**3) அகத்தூய்மை: (தான சுத்தி)**

அகம் என்ற சொல் இங்கே வழிபாட்டிடத்தையும் குறிக்கும், உள்ளத் தையும் குறிக்கும். இச்சடங்கில் இவ்விரண்டையும் தூய்மை செய்கிறோம்.

முத்தாளம் என்ற முத்திரையால் மும்முறை கையைத்தட்டி
**“ஓம் இறைதிரு கருவியால் ஏகுக” என்றும்,**
சொடுக்கல் முத்திரையால் சொடுக்கி
**“ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக” என்றும்,**
காப்புவட்ட முத்திரையால் எல்லாத்திக்குகளிலும்
**“ஓம் இறைதிருவடிவே சூழ்ந்து காக்க” என்றும்,**
தேனுமுத்திரையால் மேலும் கீழும் காட்டி
**“ஓம் சிவாமுதம் பொழிக” என்றும் ஓதுக.**
இதனால் வழிபாட்டிடம் தூய்மையாயிற்று.
அடுத்து அக வழிபாடும் அகவேள்வியும் செய்க.

இதயத்தின் நடுவாக தகராகயாத்தில் இறைவன்- இறைவி எழுந்த தாகப் பாவித்து அங்கேயே திருமஞ்சனம், தூப, தீப, அமு தூட்டல் ஆகிய வற்றைச் செய்ததாக எண்ணி வரும் பாடலை ஓதுக.

**மறவாமையான் அமைத்த மனக்கோயில் உள்ளிருத்தி**
**உறவாதி தனைஉணரும் ஒளிவிளக்குச் சுடரேற்றி**
**இறவாத ஆனந்தம் எனும்திருமஞ் சனம் ஆட்டி**
**அறவாணார்க்கு என்பென்னும் அமுதமைத்து அர்ச்சனை செய்வார்.** - பெரிய புராணம்

உடன் உள்ளே இடுப்புப் பாகத்தில் முக்கோண வடிவில் ஒரு குண்டம் இருப்பதாகப் பாவித்து அதில் குண்டலியாகிய நெருப்பை இட்டு அககேள்வி ஆற்றியதாக எண்ணி வரும் பாடலை ஓதுக:

**அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை**
**அஞ்செழுத்தால் அர்ச்சித்து இதயத்தில் – அஞ்செழுத்தால்**
**குண்டலியில் செய்தோமம் கோதண்டம் சானிக்கில்**
**அண்டனாம் சேடனாம் அங்கு** - சிவஞானபோத வெண்பா.

**4) பொருட்கள் தூய்மை:**

பூசைப் பொருடுகளைப் பரப்பி வைத்து பார்வைத் தூய்மை, தெளித்தல், திக்குக்களைக் கட்டல், காப்பு வட்டம் ஆகிய தூய்மைகளை முன் கூறியவாறே செய்க. பொது அருள் நீரை எல்லாப் பொருட்களிலும் தன்மீதும் தெளிக்க. ஓதும் மந்திரம். ஓம் இறைதிரு கருவியால் குற்றங்கள் கடிதேகுக.

பதாகை முத்திரையால் பொருட்களை மூடுவதாகப் பாவித்து, "ஓம் இறைதிரு வடிவே சூழ்ந்து காக்க" என்றும்,

சந்தனத்தை.

**"ஓம் மன்னொளி முதலே போற்றி" என்றும்,**

பரிவட்டத்தை.

**"ஓம் உமையொரு கூறா போற்றி"** என்றும்,

மலர்களை,

**"ஓம் தனியொளித் தலைவா போற்றி"** என்றும்

ஓதி மலரிடுக. பொருட்கள் தூய்மை முற்றியது.

**5) மந்திரத் தூய்மை:**

மந்திரங்களைக் குறில், நெடில், அளபெடையாக ஓதுக.

| | |
|---|---|
| குறில் | - **ஓம் சிவயநம** |
| நெடில் | - **ஓம் சிவாயநம** |
| அளபெடை | - **ஓம் சிவாஅயநம** |

இதே போன்ற உருவிரி மந்திரங்களையும் கலைமந்திரங்களையும் குறிவாகவும், நெடிவாகவும், அளபெடையாகவும் ஓதுக. மந்திரத் தூய்மை முற்றியது.

**6) இலிங்கத் தூய்மை:**

நாடோறும் சிவபூசை செய்ய வேண்டுமாதலால், முன்னாள் செய்த பூசையின் மலர்களோடு இலிங்கம் காட்சியளிக்கும். அவற்றை அப் புறப்படுத்தி இலிங்கத்தைத் தூய்மை செய்தலே இலிங்க சுத்தி எனப்படும் இலிங்கத் தூய்மை ஆகும்.

அபிடேகப்பீடத்தில் கூர்ம மற்றும் ஐந்திருக்கைகளை வரும் மந்திரங் களையும் அர்ச்சிக்க.

**ஓம் ஆமையாதனமே போற்றி**

**ஓம் பாம்பாதனமே போற்றி**

**ஓம் சிம்மாதனமே போற்றி**

**ஓம் யோகாதனமே போற்றி**

**ஓம் தாமரையானமே போற்றி**

**ஓம் சிவாதனமே போற்றி**

ஆதனங்களை அமைத்த பின், ஓம் சிவாயநம என்று ஓதி மலரிடுக.

ஏற்கெனவே இருக்கும் முன்னாள் மலர்களின் மீது பொது அருள் நீரைத் தெளித்து அவற்றை ஓம் சிவாய நம என்று எடுத்து இதயத்தில் வைத்து சண்டேசுரர் அருகில் இருப்பதாக எண்ணி அவர் பாதத்தில் வைக்க. ஓதும் மந்திரம்: ஓம் சண்டீசனே போற்றி.

பிறகு திருமுடி நீரினை எடுத்து இலிங்கத்தில் ஐம்முகங் களை நீர்விட்டுத் தூய்மை செய்ததாக எண்ணி,

**ஓம் தனியொளித் தலைவா போற்றி**

**ஓம் உயிரொளிர் பிரானே போற்றி**

**ஓம் அவிரொளி இயவுள் போற்றி**

**ஓம்  உமையொரு கூறா போற்றி**

**ஓம் மன்னொளி முதலே போற்றி**

என்ற ஐம்முக மந்திரங்களால் திருமுடி நீர் தெளிக்க. இலிங்க ஆவுடை யாரின் மீது ஓம் பாசுபத இறைதிரு கருவியே போற்றி என்று கழுவி தூய்மை செய்க.

பிறகு அமந்திரங்களையே ஓதி ஏக தீபத்தை இலிங்க முடிமேல் ஐம்முகங்களும் இருப்பதாகப் பாவித்துக் காட்டி வணங்குக. இலிங்க கத்தி அமைந்தது.

## வழிபாட்டு முறை 20 : சிவ வடிவு வணக்கம்

**மலர்ந்த அயன்மால் உருத்திரன் மகேசன்**
**பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்**
**நலத்தரும் சத்தி சிவன் வடிவாகிப்**
**பலந்தரும் லிங்கம் பராநந்தியாமே**

என்றும், ஓம்சிவாயநம என்றும் ஓதி இலிங்கத்தின் மேல் மலரிடுக.

## வழிபாட்டு முறை 21 : பேரொளி நாட்டல் (தண்டபங்கி நியாசம்)

சிவலிங்கத்தில் அருட்பெருஞ்சோதி பெரிய தூண் வடிவாய் எழுந்ததாகப் பாவித்து ஏகதீபம் இலிங்கத்தில் காட்டுக.

ஓம் ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ்சோதி போற்றி என்று இலிங்கத்தின் மீது மலர் சொரிக.

அந்த ஒளித் தூணிலேயே

**"ஓம் தனியொளித் தலைவா போற்றி"** என்று
பெருவிரலும் சுட்டுவிரலும் சேர்த்து - உச்சந்தலையிலும்
**"ஓம் உயிரொளிர் பிரானே போற்றி"** என்று
பெருவிரலும் சுட்டுவிரலும் சேர்த்து - முகத்திலும்
**"ஓம் அவிரொளி இயவுள் போற்றி"** என்று
பெருவிரலும் நடுவிரலும் சேர்த்து - மார்பிலும்
**"ஓம் உமையொரு கூறா போற்றி"** என்று
பெருவிரலும் மோதிரவிரலும் சேர்த்து - நாபியிலும்
**"ஓம் மன்னொளி முதலே போற்றி"** என்று
பெருவிரலும் சுண்டுவிரலும் சேர்த்து - முழந்தாளிலும்.

தொட்டு மலரிடுக. இதற்கு ஒளித் தூணிலேயே தலை, முகம், மார்பு, நாபி, முழந்தாள் இருப்பதாகக் கற்பித்துக் கொள்க.

## வழிபாட்டு முறை 22 : முகங்களை நாட்டல் (முண்டபங்கி நியாசம்)

இலிங்கத்தின் உச்சிப்பகுதியையும் அதையொட்டி வழியும் பகுதியையும் இதனைச் செய்ய மேற்கொள்க.

**"ஓம் தனியொளித் தலைவா போற்றி"** என்று
பெருவிரலும் சுட்டுவிரலும் சேர்த்து - உச்சியிலும்
**"ஓம் உயிரொளிர் பிரானே போற்றி"** என்று
பெருவிரலும் சுட்டுவிரலும் சேர்த்து - கிழக்கிலும்
**"ஓம் அவிரொளி இயவுள் போற்றி"** என்று
பெருவிரலும் நடுவிரலும் சேர்த்து - தெற்கிலும்
**"ஓம் உமையொரு கூறா போற்றி"** என்று
பெருவிரலும் மோதிரவிரலும் சேர்த்து - வடக்கிலும்
**"ஓம் மன்னொளி முதலே போற்றி"** என்று
பெருவிரலும் சுண்டு விரலும் சேர்த்து - மேற்கிலும்
தொட்டு ஐம்முகங்களை நாட்டி மலரிடுக.

## வழிபாட்டு முறை 23 : கண்களை நாட்டல் (வக்தர பங்கி நியாசம்)

**"ஓம் தனியொளித் தலைவன் நாட்டம் போற்றி"** என்று
பெருவிரலும் சுட்டுவிரலும் சேர்த்து - உச்சியிலும்
**"ஓம் உயிரொளிர் பிரான் நாட்டம் போற்றி"** என்று
பெருவிரலும் சுட்டு விரலும் சேர்த்து - கிழக்கிலும்
**"ஓம் அவிரொளி இயவுள் நாட்டம் போற்றி"** என்று
பெருவிரலும் நடுவிரலும் சேர்த்து - தெற்கிலும்
**"ஓம் உமையொரு கூறன் நாட்டம் போற்றி"** என்று
பெருவிரலும் மோதிர விரலும் சேர்த்து - வடக்கிலும்
**"ஓம் மன்னொளி முதல்வன் நாட்டம் போற்றி"** என்று
பெருவிரலும் சுண்டு விரலும் சேர்த்து - மேற்கிலும்

தொட்டு மலரிட்டு அந்தந்த முகங்களில் கண்களை நாட்டி மலரிடுக.

## வழிபாட்டு முறை 24 : 38 இயக்கக் கலைகளை நாட்டல் (கலாபங்கி நியாசம்)

**"ஓம் தனியொளித் தலைவன்**
**அனைத்தமைதிக் கப்பாற் கலை ஐந்தே போற்றி!"**
**"ஓம் உயிரொளிர் பிரான்**
**அமைத்தமைதிக் கலை நான்கே போற்றி!"**
**"ஓம் அவிரொளி இயவுள்**

**பட்டறிவுக் கலை எட்டே போற்றி!"**

**"ஓம் உமையொரு கூறன்**

**நிலை நிலுவற் கலை பதின்மூன்றே போற்றி!"**

**"ஓம் மன்னொளி முதல்வன்**

**கட்டு நீக்கற் கலை எட்டே போற்றி!"**

என்று ஓதி இலிங்கத்தின் மீது மலரிடுக. இது இறைவனின் இயக்கத்தை வெளிப்படுத்தும் கலைகளாம்.

## வழிபாட்டு முறை 25 : அறிவாயில் ஆறு நாட்டல் (ஷடாத்துவ நியாசம்)

இறைவன் கலை, தத்துவம், புவனம் என்ற பொருளுல கையும், எழுத்து, சொல், மந்திரம் என்ற சொல்லுகத்தையும் நாம் அறிவு பெறுவதற்காகப் படைக்கின்றான். அந்த அறிவாயில்களின் வழியேறி பேரறிவான பரம் பொருளை அடைதல் வேண்டும் எனவே, இந்த அறிவாயில்கள் ஆறையும் இங்கே லிங்கத்தில் நாட்டுகிறோம்.

1) கலை நாட்டல்:

**ஓம் அனைத்ததைக் கப்பாற் கலையே போற்றி**

**ஓம் அனைத்தமைதிக் கலையே போற்றி**

**ஓம் பட்டறிவுக் கலையே போற்றி**

**ஓம் நிலை நிறுவற் கலையே போற்றி**

**ஓம் கட்டுநீக்கற் கலையே போற்றி**

என்று ஓதி மலரிடுக.

2) பேரண்டங்கள் நாட்டல்:

**"ஓம் கட்டு நீக்கற் கலைவிரிவாம்**

**108 உலகங்களே போற்றி"**

**"ஓம் நிலைநிறுவற் கலைவிரிவாம்**

**56 உலகங்களே போற்றி"**

**ஓம் பட்டறிவுக் கலைவிரிவாம்**

**27 உலகங்களே போற்றி**

**ஓம் அனைத்தமைத்திக் கலைவிரிவாம்**

**18 உலகங்களே போற்றி**

**ஓம் அனைத்தமைதிக் காப்பாற் கலைவிரிவாம்**

**15 உலகங்களே போற்றி**

**ஓம் ஐங்கலைவிரிவாம்**

**எண்ணிறந்த உலகங்களே போற்றி**

என்று ஓதி மலரிடுக.

**3) உடற்கூறுகள் 36 நாட்டல் (தத்துவ நியாசம்)**

ஓம் மனவுரு நாலாறுநாயக அயனே போற்றி

ஓம் அறிவுரு ஏழின்நாயக அரியே போற்றி

ஓம் சிவவுரு ஐந்தின் நாயக அரனே போற்றி

என்று ஓதி மலரிடுக.

**4) எழுத்துக்கள் நாட்டல் (மாத்ருக நியாசம்)**

இது இரு வகைப்படும் அ) ஆதார உள் எழுத்துக்கள் ஆ) புறஒலி எழுத்துக்கள்

**அ) ஆதார உள்ளெழுத்துக்கள் (வித்தெழுத்துக்கள்)**

| | |
|---|---|
| மூலம் (மூலாதாரம்) | - நான்கு எழுத்துக்கள் |
| கருவாய் (சுவாதிட்டானம்) | - ஆறு எழுத்துக்கள் |
| நாபி (மணிபூரகம்) | - பத்து எழுத்துக்கள் |
| இதயம் (அநாகதம்) | - பனிரெண்டு எழுத்துக்கள் |
| கழுத்து (விசுத்தி) | - பதினாறு எழுத்துக்கள் |
| புருவநடு (ஆஞ்ஞை) | - இரண்டு எழுத்துக்கள் |
| தலை உச்சி (சகஸ்ரதளம்) | - அனைத்து எழுத்துக்கள் |

இவ்வாறு சுழிமுனை நாடியில் அவ்வப்பகுதியில் மலர் இதழ்களைப் போன்று குழிவு இருக்கும். அவற்றில் அருவமாக வித்தெழுத்தொலிகள் பதித்திருக்கும். அவற்றை வரும் மந்திரங்களால் இலிங்கத்தில் பதிக்க.

**"ஓம் மூலமலர் நால்வித்தெழுத்தே போற்றி"**

**ஓம்கருவாய் மலர் அறுவித்தெழுத்தே போற்றி"**

**"ஓம் நாபிமலர் பதின்வித் தெழுத்தே போற்றி"**

**"ஓம் இதயமலர் பன்னிரு வித்தெழுத்தே போற்றி"**

**“ஓம் கழுத்துமலர் ஈரெட்டு வித்தெழுத்தே போற்றி”**

**“ஓம் புருவ நடு மலர் இருவித்தெழுத்தே போற்றி”**

**“ஓம் தலைமேல் மலர் எல்லாவித்தெழுத்தே போற்றி”**

## ஆ) புறஒலி எழுத்துக்கள்

இவை புறத்தே நாம் ஒலிக்கும் மொழி எழுத்துக்கள். தமிழில் எழுத்துக்கள் 51 என்று திருமந்திரம் கூறுகிறது. பாடல்:

**ஓதும் எழுத்தோ டுயிர்க்கலை மூவைஞ்சும்**
**ஆதி எழுந்தவை ஐம்பதோ டொன்றென்பர்**
**சோதி எழுத்தினில் ஐயிரு மூன்றுள**
**நாத எழுத்திட்டு நாடிக் கொள்வீரே!**

வடமொழியில் 51 எழுத்துக்கள் கிடையா. மொத்தம் 47 எழுத்துக்கள் தாம். வடமொழி நெடுங்கணக்கு படித்தவர்க்கு இது தெரியும். தமிழில் தான் எழுத்துக்கள் 51 என்று திருமூலர் கூறி இருக்கிறார். இதுபற்றிய மேல் விளக்கங்களை “அருந்தமிழில் எழுத்துக்கள் 51” என்ற தலைப்பில் வெளி வர இருக்கும் எனது நூலைப் படித்தறியலாம்.

**சுருக்க விளக்கம்:**

| | |
|---|---|
| உயிரெழுத்துக்கள் | - 12 |
| இ, உ, ஐ, ஔ குறுக்க எழுத்துக்கள் | - 4 |
| ஆய்த எழுத்து | - 1 |
| மெய்யெழுத்து | - 18 |
| மெய் நீளெழுத்துக்கள் (க,ச,ட,த,ப) | - 15 |
| மகரக் குறுக்கம் | - 1 |

இவற்றின் அடிப்படையில், 51 எழுத்துக்களை இலிங்கத்தில் வரும் மந்திரங்களை ஓதிப்பதிக்க.

**ஓம் பன்னிரு உயிரெழுத்துக்களே போற்றி**

**ஓம் ஈரிடு உயிர் குறுக்க எழுத்துக்களே போற்றி**

**ஓம் ஆய்த எழுத்தே போற்றி**

**ஓம் பதினெண் மெய்யெழுத்துக்களே போற்றி**

**ஓம் ஐம்மூன்று மெய் நீளெழுத்துக்களே போற்றி**

**ஓம் மகரக் குறுக்க எழுத்தே போற்றி**

## 5) சொற்களை நாட்டல் (சிவாகம நியாசம்)

சொற்களால் ஆனதில் மேலானவை சிவாகமங்களே. இவற்றை இலிங்கத்தில் பதிக்க வேண்டும்.

சிவாகமங்கள் 28 என்பர். திருமூலர் மொத்தம் 9 என்பார். அந்த ஒன்பதில் ஒவ்வொன்றும் கருமப்பிரிவு, யோகப்பிரிவு, ஞானப் பிரிவு என முப்பிரிவுகள் இருக்கும். ஆக 9x3 = 27 ஆகமங்கள் எனப்பட்டன. இவற்றில் ஒன்றுக்கொன்று முரண்படும் இடங்களை விளக்கி ஒருமைப்படுத்தும் ஆகமம் சர்வஞானோத் தர ஆகமம் ஒன்று கூட்ட ஆகமம் 28 என்பது திருமூலர் கொள்கை.

**ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு**
**மோகமில் நாலேழு முப்பேதம் உற்றுடன்**
**வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்ம்மையொன்று**
**ஆக முடிந்தது அருஞ்சுத்த சைவமே** - திருமந்திரம்

“நவ ஆகமம் எங்கள் நந்தி பெற்றானே” என்றும் திருமூலம் கூறி யருளியுள்ளார். எனவே, நந்திக்கு மேல் ஆணைச்சான்று ஆக மத்திற்கு இருக்க இயலாது. ஆக, ஆகமம் ஒன்பது என்பதே உண்மையாக இருக்க இயலும். அது 28 ஆனதற்கான விளக்கத்தையும் திருமூலரே அருளி இருக்கிறார்.

எனவே இதன் அடிப்படையில் வரும் மந்திரங்களை ஓதி இலிங்கத்தில் ஆகமங்களைப் பதிக்க.

**ஓம் ஒன்பான் ஆகமங்கள் போற்றி!**
**ஓம் முப்பேத ஒன்பான் ஆகமங்கள் போற்றி!**
**ஓம் ஞானத் துணிவாகமம் போற்றி!**

## 6) மந்திரம் நாட்டல்: (பஞ்சாட்சர கோள நியாசம்)

(அ) **ஓம் ஓம் போற்றி**
**ஓம் நம் போற்றி**
**ஓம் மம் போற்றி**
**ஓம் சிம் போற்றி**

**ஓம் வாம் போற்றி**

**ஓம் யம் போற்றி**

**இவ்வாறு ஓதி மலரிடுக**

(ஆ) **ஓம் தனியொளித் தலைவன் தேவியே போற்றி**

**ஓம் உளிரொளிர் பிரான் தேவியே போற்றி**

**ஓம் அவிரொளி இயவுள் தேவியே போற்றி**

**ஓம் உமையொரு கூறன் தேவியே போற்றி**

**ஓம் மன்னொளி முதல்வன் தேவியே போற்றி**

**ஓம் இறைதிரு இதய இயக்க சத்தியே போற்றி**

**ஓம் இறைதிரு முக இயக்க சத்தியே போற்றி**

**ஓம் இறைதிரு முடியின் இயக்கச் சத்தியே போற்றி**

**ஓம் இறைதிரு வடிவ இயக்கச் சத்தியே போற்றி**

**ஓம் இறைதிரு கண்ணியக்கச் சத்தியே போற்றி**

**ஓம் இறைதிரு கருவி இயக்கச் சத்தியே போற்றி**

என்று உருவிரிமந்திரத் தேவியரையும் உடன் இலிங்கத்தில் பதித்து மலரிடுக.

## வழிபாட்டு முறை 26 : எண்வகை இயவுள் நாட்டல் (அட்ட மூர்த்தீஸ்வர நியாசம்)

**"ஓம் கதிரவன் போற்றி"**

**"ஓம் கதிரவன் இயக்க இயவுள் போற்றி"**

**ஓம் திங்கள் போற்றி"**

**"ஓம் திங்கள் இயக்க இயவுள் போற்றி"**

**"ஓம் உயிர்த்தொகை போற்றி"**

**"ஓம் உயிர்த்தொகை இயக்க இயவுள் போற்றி"**

**"ஓம் விண்ணே போற்றி"**

**"ஓம் விண்ணியக்க இயவுள் போற்றி"**

**"ஓம் வளியே போற்றி"**

**"ஓம் வளி இயக்க இயவுள் போற்றி"**

**"ஓம் தீயே போற்றி"**

**"ஓம் தீ இயக்க இயவுள் போற்றி"**

**"ஓம் புனலே போற்றி"**

**"ஓம் புனலியக்க இயவுள் போற்றி"**

**"ஓம் மண்ணே போற்றி"**

**"ஓம் மண்ணியக்க இயவுள் போற்றி"**

இம்மந்திரங்களை ஓதி இலிங்கத்தில் பதித்து மலரிடுக.

## வழிபாட்டு முறை 27 : சதாசிவ வழிபாடு

**உலகில் எடுத்தது சத்தி முதலா**
**உலகில் எடுத்தது சத்தி வடிவா**
**உலகில் எடுத்தது சத்தி குணமாய்**
**உலகம் எடுத்தது சதாசிவம் தானே!**

இத்திருமந்திரப் பாடலை ஓதி சதாசிவரை உள்ளே தியானித்து இலிங்கத்தில் மலரிடுக.

## வழிபாட்டு முறை 28 : எழுந்தருளப் பண்ணுதல்: (ஆவாகனம்)

இதுவரை மேலே கூறியவாறு இலிங்கத்தை ஆயத்தம் செய்தபின் இந்த இலிங்கத்தில் இப்போது சிவபெருமானை எழுந் தருளச் செய்தல் வேண்டும். பாடல்கள் வருமாறு:

**சிவபெருமான் என்று நானழைத் தேத்த**
**தவபெருமான் என்று தான்வந்து நின்றான்**
**அவபெருமான் என்னை ஆளுடை நாதன்**
**பவபெருமானைப் பணிந்து நின்றேனே!** - திருமந்திரம்

**சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்**
**அவனெனை ஆட்கொண்டளித்திடுமாகில் அவன் தனையான்**
**பவனெனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்னாளழைத்தால்**
**இவனெனைப் பன்னாள் அழைப்பொழியான் என்றெதிர்ப்படுமே** - அப்பர்

## வழிமுறை 29 : முதல் பணிவிடைகள் ஆற்றல்

**(பாத்யம், ஆசமனம், அர்க்கியம் கொடுத்தல்)**

நந்தி முத்திரையால் பூக்களை எடுத்து திருவடி நீரில் தொட்டு எடுத்து.

**"ஓம் எல்லாம் வல்ல சிவபெருமானின் திருவடிகளைவிளக்கி வணங்கு கின்றேன்"** என்று இரு திருவடிகளைப் பாவித்துத் தெளிக்க இதே மாதிரி திருவாய் நீரில் எடுத்து,

**"ஓம் எல்லாம் வல்ல சிவபெருமானின் திருவாய் விளக்கி வணங்கு கின்றேன்"** என்று சிவலிங்கத்தில் நாட்டிய ஜம்முகங்களின் திரு வாய்களிலும் காட்டித் தெளிக்க.

இதே மாதிரி திருமுடிநீரில் எடுத்து

**"ஓம் எல்லாம் வல்ல சிவபெருமானின் திருமுடி விளக்கி வணங்கு கின்றேன்"** என்று சிவலிங்கத்தில் நாட்டிய ஜம்முகங்களின் உச்சியில் காட்டித் தெளிக்க.

பிறகு வில்வம், அறுகு, பூக்கள், மஞ்சளகிரி ஆகியவற்றை எடுத்து முடிமேல் வைக்க.

## வழிபாட்டு முறை 30 : ஆனைந்து கூட்டல் (பஞ்ச கவ்ய சேகரம்)

### ஆனைந்து (பஞ்சகவ்யம்)

பூசை தாளத்தின் தரையில் பதக்கு அளவுள் அரிசியைப் பரப்பி, அதன்மீது ஒன்பது கோட்டங்கள் உடைய சதுரங்களைக் கீழ்க்கண்டவாறு வரைந்து கொள்க:



நடுக்கோட்டத்தில **“ஓம் ஆ.்.ம் சிவதத்துவக் கோட்டமே போற்றி”** என்று மலரிட்டு அர்ச்சித்து அதில் ஒரு கலத்தை (பாத்திரத்தை) வைத்து **“ஓம் ஆ.்.ம் நன்னிலைக் கலனே போற்றி”** என்று கலன்மீது மலரிட்டு அக்கலனில் **“ஓம் ஆப்பாலே நிறைக”** என்று ஓதி பாலைச் சொரிக. பின் **“ஓம் தனியொளித் தலைவா போற்றி”** என்று கலனைப் பூசிக்க. உடன் இந்த மந்திரத்தையே ஓதி பாலை அபிமந்திரிக்க வேண்டும். அதாவது கலனைப் பதாகை முத்திரை யால் மூடி மேற்கூறிய மந்திரத்தை ஒருமுறை ஓத வேண்டும்.

அடுத்து கிழக்குக் கோட்டத்தில் **“ஓம் அ.்.ம் சதாசிவதத்துவக் கோட்டமே போற்றி”** என்று மலரிட்டு அர்ச்சித்து அதில் ஒரு கலத்தை வைத்து **“ஓம் அ.்.ம் அமைதிக் கலனே போற்றி”** என்று கலன்மீது மலரிடுக. உடன் அக்கலனில், **“ஓம் ஆத்தயிர் நிறைக”** என்று ஓதி தயிரை நிறைக்க. பின், **“ஓம் உயிரொளிரிப் பிரானே போற்றி”** என்று ஓதி கலனைப் பூசிக்க. பின் கலனைப் பதாகை முத்திரையால் மூடி மேற்கூறிய மந்திரத்தை இருமுறை உச்சரிக்க.

பின்னர் தெற்குக் கோட்டத்தில் **ஓம் ஆ.்.ம் வித்தியா தத்துவக் கோட்டமே போற்றி** என்று மலரிட்டு அர்ச்சித்து அதில் ஒரு கலத்தை வைத்து, ஓம் **ஆ.்.ம் ஒளிமயக் கலனேபோற்றி** என்று கலன்மீது மலரிடுக. உடன் அக்கலனில் ஓம் ஆநெய்நிறைக என்று ஓதி நெய்பால் கலனை நிறைக்க. பின், **ஓம் அவிரொளி இயவுள் போற்றி** என்று ஓதிக் கலனைப் பூசிக்க. உடன் கலனைப் பதாகை முத்திரையால் மூடி மேற்கூறிய மந்திரத்தினை மும்முறை ஓதுக.

இதன் பிறகு, வடக்குக் கோட்டத்தில், **ஓம் ஆ.்.ம்** புருட **தத்துவக் கோட்டமே போற்றி** என்று மலரிட்டு அர்ச்சித்து அதில் ஒரு கலத்தை வைத்து, **ஓம் ஆ.்.ம் இரத்தின நீர்க்கலனே போற்றி** என்று கலன்மீத மலரிடுக. உடன் அக்கலனில் ஓம் ஆச்சிறுமோர் நிறைக என்று ஆவின் சிறுமோரை கலனில் நிறைக்க. உடனாக **ஓம் உமையொரு கூறா போற்றி** என்று கலனுக்கு மலரிட்டு அதனைப் பதாகை முத்திரையால் மூடி மந்திரத்தை நான்கு முறை ஓதுக. அடுத்து மேற்குக் கோட்டத்தில் ஓம் **ஆ.்.ம்**

**காலதத்துவக் கோட்டமே போற்றி** என்று மலரிட்டு அர்ச்சித்து அதில் ஒரு கலத்தை வைத்து, ஓம் **ஆ.:.ம் அமுதுறைக் கலனே போற்றி** என்று கலனை அர்ச்சிக்க. அதில், ஓம் ஆவெண்ணெய் நிறைக என்று ஆவின் வெண்ணெயை நிறைக்க. உடனாக,

**ஓம் மன்னொளி முதலே போற்றி** என்று கலனைப் பூசித்து, கலனைப் பதாகையால் மூடி இதே மந்திரத்தை ஐந்து முறை ஓதுக.

இதற்குப் பிறகு, வடகிழக்குக் கோட்டத்தில், **ஓம் ஆ.:.ம் மூலதத்துவக் கோட்டமே போற்றி** என்று மலரிட்டு அர்ச்சித்து அதில் ஒரு கலத்தை வைத்து, **ஓம் ஆ.:.ம் கலனேபோற்றி** என்று கலனை அர்ச்சிக்க. அதில் தருப்பைப் புல்லுடன் கூடிய நீரை, **ஓம் தெய்வ மலிநீரே நிறைக** என்று நிறைக்க. உடன் ஓம் சிவாயநம என்று கலனைப் பூசித்து, கலனைப் பதாகை முத்திரையால் மூடி இதே மந்திரத்தை ஆறுமுறை ஓதுக.

இவை முடிந்தவுடன் **ஓம் சிவாயநம** என்று உச்சரித்துக் கொண்டு வெண்ணெயை மோரிலும் இவ்விரண்டையும் நெய்யிலும், இம் மூன்றையும் தயிரிலும், இந்நான்கைப் பாலிலும் சேர்த்து இறுதியில் தருப்பை நீரையும் ஒன்றாகச் சேர்க்க வேண்டும்.

முடிவாக தருப்பையை உடன் வைத்து பதாகை முத்திரையால் மூடி உருவிரி மந்திரம் பதினொன்றையும் ஓதி சுற்றிச் சொடுக்கி **ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக** என்று ஓத வேண்டும். ஓதி, சுட்டுவிரலை மேற்கூறிய கலவையில் தொட்டவாறு சுற்றி, **ஓம் இறை திருவடிவே சூழ்ந்து காக்க**, என்று ஓதுக. இறுதியில் பசுமடி முத்திரை காட்டி **ஓம் சிவாமுதம் பொழிக** என்று ஓதுக. ஆனைந்து ஆயத்தமாயிற்று.

இந்த ஆனைந்து பற்றி சிவாலய நித்திய பூஜாவிதி என்ற அகோர சிவாச்சாரியார் இயற்றிய நூலில் பால், தயிர், நெய், ஆச்சிறுநீர், ஆச்சாணம் என்று கொள்ளப்பட்டுள்ளது. ஆனால், இது திருமுறைக்கும் மற்றும் நடைமுறைக்கும் ஒத்து வராத பகுதிகளை உள்ளடக்கி இருக்கிறது என்பது சிந்திக்கப் புலனாகும்.




ஆனைந்து என்பது திருமஞ்சனம் என்னும் அபிடேகத்துக்கு உரியது. இந்த சொல் திருமுறைகளில் பழகி வந்திருக்கிற சொல். எனவே, பிற்காலத்தில் பஞ்சகவ்யம் என்ற வடசொல்லை ஆனைந்து என்று மொழிபெயர்த்தார்கள் என்று சொல்வது கூடாது.

பஞ்ச கவ்யம் என்ற சொல் ப-ச-க-வ்யம் என்று பிரிக்கப்பட்டு பொருள் காணப்படவேண்டும் என்று தத்புருஷ தேசிகர் தனது சிவபூஜா விதியும் விளக்கங்களும் என்ற நூலில் கூறுகிறார். ப- பாவநீக்கத்தையும், ச-ஆன்ம கத்தினையும், ச-பிறவி நீக்கத்தையும், வ்யம்-முத்திப் பேற்றையும் குறிப்ப தாக அவர் கூறுகிறார். இதில் ஆவின் ஐந்து அபிடேகப் பொருள்கள் என்ற பொருள் இல்லை. ஆனால், இவரே பசுவினிடத்துள்ள ஐந்து என்பது பஞ்சகவ்யத்தின் பொதுப்பொருள் என்கிறார். இதில் பசுவினிடத்திருந்து கிடைக்கும் அபிடேகத்திற்குரிய ஐந்து பொருள்கள் என்பது பெறப்பட வில்லை. ஆனால், திருமுறைகளோ, ஆனைந்து அபிடேகத்திற்கு உரி யவை என்றே கூறுகின்றன.

சேக்கிழார் சண்டேசுவர நாயனார் புராணத்தில் பசுவின்மடியைச் சிறப்பித்து,

**ஆயசிறப்பினாற் பெற்ற அன்றே மன்றுள் நடம்புரியும்**
**நாயனார்க்கு வளர்மதியும் நகுவெண் டலைத் தொடையும்**
**மேயவேணித் திருமுடிமேல் விரும்பி ஆடிஅருளுதற்குத்**
**தூயதிருமஞ் சனம்ஐந்தும் அளிக்கும் உரிமைச் சுரப்பிகள்தாம்.**

என்று பாடியருளுகிறார். ஆக, பசுவின் மடியில் இருந்து சுரக்கும் பொருள் ஐந்தும் திருமஞ்சனம் என்றும் அவையே அபிடேகத்திற்கு உரியவை என்று தெளிவுபடுத்துகிறார்.

ஆனால், இதுவரை மேலே சிவாலய நித்ய பூஜா விதியில் குறிப் பிட்டுள்ளபடி சிவபெருமான் திருமுடிமேல் சாணத்தைக் கவிழ்த்து அபிடே கம் செய்ததாக எங்கும் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை. அதே போன்று ஆவின் சிறுநீரால் இறைவனுக்கு அபிடேகம் செய்ததாக எங்கும் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை. இது நடைமுறையிலும் இல்லை, திருமுறையிலும் இல்லை.

எனவே, எங்கோ ஒரு தவறு நடந்திருக்கிறது என்பதை அறிய முடிகிறது. ஆனைந்து என்பதற்குப் பொருள் காண இயலாமல் பால், தயிர், நெய் என்பதோடு ஐந்து பொருட்கள் வர இன்னும் இரண்டிருக்கிறதே என்று எண்ணி ஆவின் சாணத்தையும், ஆவின் சிறுநீரையும் தவறாகப் பிற்காலத்தில் அதாவது திருமுறைகளுக்குப் பிற்காலத்தில் அதாவது திருமுறைகளுக்குப் பிற்காலத்தில் சேர்த்து ஆகமத்தில் இடைச் செருகல் செய்திருக்க வாய்ப்பிருக்கிறது.

இந்த வாய்ப்பு நேரக்கூடும் என்று எண்ணியோ என்னவோ, சேக்கிழார் இதைத் தெளிவுபடுத்த ஒரு சொல்லை மேற்கூறிய பாடலில் பெய்திருக் கிறார். அதாவது திருமஞ்சனத்திற்கு ஐந்து பொருள்களை பசுவின் சுரபியாகிய மடி கொடுக்கிறது என்றார். சாணமோ, சிறுநீரோ பசுவின் மடியிலிருந்து வருவதல்ல. அவை கழிவுப் பொருள்கள். சுரப்புப் பொருள்களல்ல.

எனவே, பசுவின் மடியில் இருந்து சுரக்கும் பால் பொருளிலிருந்து தான் நாம் ஐந்தைக் கொள்ள வேண்டும் என்பது தோற்றமாகிறது. ஆவின் பால் திரிந்து ஐந்து பொருள்களை நமக்கு அளிக்கிறது. அவையாவன: 1) பால் 2) தயிர் 3) மோர் 4) வெண்ணெய் 5) நெய்.

பாலின் திரிவு தயிர், தயிரின் திரிவு மோரும், வெண்ணெயும், வெண்ணெயின் திரிவு நெய். தயிரைக் கடைந்தால் வெண்ணெய் மேலே ஆடும். அடியில் மோர் இருக்கும். கடையாத கட்டித் தயிரால் அபிடேகம் செய்ய லாம். தயிரைக் கடைந்து வெண்ணெய் தனியாக எடுத்து வெண்ணெ யாலும் அபிடேகம் செய்யலாம், மோராலும் அபிடேகம் செய்யலாம்.

இவ்வாறு வெண்ணெயால் அபிடேகம் செய்த ஊர்கள் உண்டு. திருவெண்ணெய் நல்லூர், திருநெல் பெண்ணெய் ஆகியவை சான்று.

**நல்வெணெய் விழுதுபெய் தாடிதிர் நாடொறும்**
**நெல்வெணெய் மேவிய நீரே.**

என்று சம்பந்தர் திருநெல்வெண்ணெய் பதிகத்தில் அவ்வூரில் வெண்ணெயால் சிவபெருமானுக்கு அபிடேகம் தினந்தோறும் நடந்தது என்று குறிப்பிடுகிறார்.

எனவே, பால் பொருட்களில் ஒன்றான வெண்ணெயால் இறை வனுக்கு அபிடேகம் நடந்ததற்கான அழிக்க இயலாத ஆணித்தரமான சான்று கிடைக்கிறது. இனி, தயிர் என்பது நீருடன் கலந்தே இருக்கும். எனவே, கட்டித் தயிரை உடைத்து அபிடேகம் செய்யும் போது அங்கங்கே தங்கிய கட்டியும் தயிரும் நீருமான மோரும் உடன் அபிடேகமாவது பெறப் படுகிறது. ஆகவே, மோரபிடேகமும் உடன் காண்கிறோம்.

தயிரில் மோரும், வெண்ணெயும் கலந்து விடுவதால் திருமுறை ஆசிரியர்கள் பால் தயிர் நெய் ஆட்டுகந்தானை என்று இவ்வைந்து பால் பொருட்களையும் அடக்கிக் கூறினார்கள். இதைப் பிரித்தறிய வாராத கோளாறினால் பிற்காலத்தில் ஆவின் சாணமும், ஆவின் சிறுநீரும் தவறாக ஆனைந்தில் சேர்க்கப்பட்டுவிட்டது.

இது இந்தச் சிவாலய பூஜா விதியிலேயே சாணத்திற்கும், சிறுநீருக்கும் மந்திரம் கூற இயலாமல் ஏதோ இட்டுக்கட்டிக் கூறியதில் இருந்து தெரிகிறது. பாலை பால் என்றும். தயிரைத் தயிர் என்றும், நெய்யை நெய் என்றும் வடமொழியில் கூறி அந்தந்தக் கலனில் நிறைக்கச் சொன்னவர் கள் சாணத்தைச் சாணம் என்று சொல்ல இயலாமல் சங்கடப்பட்டுக் கந்தத்வாராம் என்றும், ஆவின் ஆவின் சிறுநீரை அப்படியே சொல்லச் சங்கடப்பட்டுக் கந்தத்வாராம் என்றும், ஆவின் சிறுநீரை அப்படியே சொல்லச் சங்கடப்பட்டு அதன் பெயரைச் சொல்லாமல் தத்ஸ விதுர்வ ரேண்யம் என்றும் அவற்றிற்கு மந்திரம் கூறியிருப்பதிலிருந்து இவ் விரண்டும் சங்கடப்பட்டுக் கொண்டே தவறாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது எனப் புலனாகிறது.

தவற்றை ஒப்புக் கொண்டு அதைத் திருத்திக் கொள்வதே நேர்மை. அதன்படி ஆவின் சாணத்தையும், சிறுநீரையும் ஒதுக்கிவிட்டு கீழ்வரும் முறைப்படி வெண்ணெயையும் மோரையும் சேர்க்கலாம்.

வடக்குக் கோட்டத்தில் செய்யும் முறைகளை ஏற்கெனவே கூறியவற்றில் ஒரு சிறுமாற்றம் செய்து கொள்ளலாம். அங்கே ஆவின் சிறு நீருக்குப் பதிலாக, ஓம் ஆச்சிறு மோர்நிறைக என்று கலனில் மோரால் நிரப்புக.

இதே போன்று மேற்குக் கோட்டத்தில், ஆவின் சாணத்திற்குப் பதிலாக ஓம் ஆவெண்ணெய் நிறைக என்று கலனில் வெண்ணெய் விழுதை நிறைக்க. இதுவே அறிவுக்குப் பொருந்துவது.

ஒரு சில ஆகமத்தில் மாதத்தில் சுமார் 14 திதிகளில் பல்துலக்கக் கூடாது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதற்காக யாரும் பல்துலக்காமல் இருப்ப தில்லை. சில மறைவிடங்களை மண்ணால் தேய்த்து தூய்மை செய்து கொள்ள வேண்டும் என்று ஆகமம் கூறுகின்றது. அதற்காக யாரும் மண்ணைத் தேய்த்துக் கொள்வதில்லை. அதுபோல பஞ்சகவ்வியத்திலும் நேர்ந்த தவறைத் தொடர வேண்டும் என்பதில்லை. அறிவில் ஊறியவர்கள் இங்கு கூறியதை மேற்கொள்ளலாம்.

**ஐந்தமுதம் (பஞ்சாம்ருதம்)**

மேற்கூறிய ஆனைந்து அபிடேகத்திற்குரியது. அதைத் தயார் செய்தது போலவே ஐந்தமுதம் ஆயத்தம் செய்வதையும் ஆகமம் கூறுகிறது. இதுவும் அபிடேகத்திற்கு உரியதாம். முறை கள் வருமாறு.

ஆனைந்து ஆயத்தம் செய்து வைத்த இடத்திற்குக் கிழக்குப் பக்கத்தில் நெல்லால் மேடை செய்து முன்போலவே ஒன்பான் கோட்டங்களைச் சதுரமாக நெல்லின் மீது வரைந்து கொள்க.



**கோட்ட பூசை**

நடு - ஓம் ஆஃம் மண்தத்துவ கோட்டமே போற்றி
கிழக்கு - ஓம் ஆஃம் நீர்தத்துவ கோட்டமே போற்றி
தெற்கு - ஓம் ஆஃம் தீத்தத்துவ கோட்டமே போற்றி
வடக்கு - ஓம் ஆஃம் வெளிதத்துவ கோட்டமே போற்றி
மேற்கு - ஓம் ஆஃம் வளிதத்துவ கோட்டமே போற்றி

கலங்கள் ஐந்தை எடுத்துக் கொண்டு ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக என்று ஓதி நீரால் தூய்மை செய்து, ஓம் இறைதிரு இதயமாய் நிறைக என்று ஓதி தூபம் அல்லது ஊதுவத்திப் புகை காட்டி பாத்திரங்களை மேற்கூறிய ஐந்து கோட்டங்களிலும் வைக்க.

**கலன்களுக்கு பூசை**

**நடு - ஓம் ஆஃம் மனமலி கலனே போற்றி**
**கிழக்கு - ஓம் ஆஃம் சுவைமலி கலனே போற்றி**
**தெற்கு - ஓம் ஆஃம் ஒளிமலி கலனே போற்றி**
**வடக்கு - ஓம் ஆஃம் ஓசைமலி கலனே போற்றி**
**மேற்கு - ஓம் ஆஃம் ஊற்மெற கலனே போற்றி**

**கலன்களில் இடுபொருள்**

**நடு - பால்**
**கிழக்கு - பழம்**
**தெற்கு - தேன் (அ) நெய்**
**வடக்கு - கருப்பஞ்சாறு (அ) இளநீர்**
**மேற்கு - சருக்கரை (அ) வெல்லம்**

தனித்தனியே உருவிரி மந்திரங்கள் பதினொன்றாலும் கலன்களை பதாகை முத்திரையால் மூடி அபிமந்திரித்து பொருட்களைக் கூட்டுக. முதலில் கிழக்கிலிருந்து தொடங்கி பழத்தைத் தேனில் (அ) நெய்யில் கலந்து இவ்விரண்டையும் கருப்பஞ்சாறு (அ) இளநீரில் கலந்து இம் மூன்றையும் சருக்கரை (இ) வெல்லத்தில் கலந்து இந்நான்கையும் பாலில் கலந்து கொள்க.

நடுக்கலனில் ஐந்தும் கலந்த நிலையில் அதில் சதாசிவரை (ஆவாகனம்) எழுந்தருளச் செய்க. சதாசிவர் எழுந்தருளுதற்கு உரிய பாடல்களும் மந்திரங்களும்.

**ஓம் சதாசிவத் தத்துவப் பரப்பே போற்றி**
**ஓம் சதாசிவத் தத்துவத் தலைவா போற்றி**
**ஓம் அண்டாகாய பீமா போற்றி**
**ஓம் அவன்திறன் கலவி கரணியே போற்றி**
**ஓம் ஆகாயக் கூறனைத்தும் போற்றி**
**ஓம் அனைவர்க்கருளும் ஆண்டவா போற்றி**
**ஓம் வெள்ளிய மன்னொளி முதலே போற்றி**
**ஓம் உள்ளில் உடனாம் தேவியே போற்றி**
**ஓம் செழும்பொன் சதாசிவ அணணே எழுக**
**ஓம் அழகிய சதாசிவம் எழுந்தருளுகவே**

**தானொரு கூறு சதாசிவன் எம்மிறை**
**வானொரு கூறு மருவியும் அங்குளள்**
**கோனொரு கூறுடல் உள்நின் றுயிர்க்கின்ற**
**தானொரு கூறு சலமய னாமே**

**உலகில் எடுத்தது சத்தி முதலா**
**உலகில் எடுத்தது சத்தி வடிவாய்**
**உலகில் எடுத்தது சத்தி குணமாய்**
**உலகம் எடுத்தது சதாசிவம் தானே**

இம்மந்திரங்களை ஓதி நடுக்கலன் மீது மலர் சொரிக. தூபதீபம் காட்டி வழிபடுக. **ஓம் சிவாய நம** என்று ஐந்தெழுத்தால் அந்தக் கலனை அபிமந்திரித்து சுற்றிச் சொடுக்கி **ஓம் இறைதிரு கருவியால் கடிதேகுக** என்றும் சுட்டுவிரலால் தொட்டுச் சுற்றி, **ஓம் இறைதிருவடிவே சூழ்ந்து காக்க** என்று மலர் சொரிக.

## வழிபாட்டு முறை 31 : திருமஞ்சனம் (அபிடேகம்)

இடக்கையினால் மணி அடித்துக் கொண்டே வலக்கையினால் திருமஞ்சனம் ஆட்டுக. இலிங்கத்திற்கு இரண்டங்குலத்திற்கு அதிகமான உயரத்திலிருந்து திருமஞ்சனம் ஆட்டக் கூடாது.

**திருமஞ்சனம் ஆட்டும் முறைமை**

1. சந்தன அல்லது நறுமண எண்ணெய்
2. மாப்பொடி
3. நெல்லி முள்ளிப் பொடி
4. மஞ்சள்தூள்
5. சாரநீர்

(வெட்டிவேர், குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், ஏலம், கராம்பு, சாதிக்காய், சாதி பத்திரி, கஸ்தூரி, கோரோசனை, வால்மிளகு இவை இடப்பட்டுச் சாரம் இறங்கிய நீர்)



6. ஐந்தமுது
7. பால்
8. தயிர்
9. நெய்
10. மோர்
11. வெண்ணெய்
12. தேன்
13. இளநீர்
14. பழவகைகளின் சாறு
15. கரும்புச் சாறு
16. சந்தனம்
17. அன்னம்
18. வில்வ இலை இட்ட நீர்
19. சல்லடை நீர்
20. பன்னீர்
21. பொன்னாபரண நீர்
22. தர்ப்பை இட்ட நீர்
23. சிறப்பருள் நீர்

ஒவ்வொரு திருமஞ்சனத்திற்கும் இடையில் சந்தன - குங்குமம் பொட்டிட்டு சிற்றளவில் பழம் அமுதூட்டி, தூபதீபம் காட்டி பின்னர் தூய நீரால் கழுவி திருவொற்றாடையால் துடைக்க.

**திருமஞ்சனத்தில் ஓத வேண்டியவை**

1. ஓம் சிவாயநம
2. உருவிரி மந்திரங்கள்
3. சிவபுராணம்

ஒற்றாடையால் ஒற்றும் போது - ஓம் இறைதிருவடிவே போற்றி என்க. உடன், மலரிட்டு - ஓம்சிவாய நம என ஓதுக. திருமஞ்சன இறுதியில்,

**திருமஞ்சனம் இவை துய்த்ததன் பின்னர்**
**திருவாய் விளக்கநீர் தந்தனன் போற்றி**

என்று ஓதி திருவாய் நீர் வழங்குக. ஓம் இறைதிரு இதயமய் அளிக்க என ஓதுக.

ஒற்றாடை யில் துடைத்து பட்டு சாத்துக, சாத்தும் போது

**தூமென் துகிலால் துடைத்த பின்னர்**
**நோயில் பட்டுடை புனைந்தனன் போற்றி**

என்று ஓதிச் சாத்துக. சாத்தி ஓம் உமையொரு கூறா போற்றி என்று ஓதி மலரிடுக.

**கடிமணப் பன்னீர் களப கத்தூரி**
**அடிமுடி எங்கும் இறைந்தனன் போற்றி**

என்று நறுமணப் பொருள்களைத் தெளிக்க.

**நவமணி பொதிந்த நல்ல பரண**
**சிவணி எழில்பெற புனைந்தனன் போற்றி**

என்று ஆபரணங்களால் புனைக. புனைந்து ஓம் உமையொரு கூறா போற்றி என்று நீறிடுக. இட்டு, **ஓம் மண்ணொளி முதலே போற்றி** என்க. உடன் மலரிடுக.

**புந்தி விளங்கும் புருவ நடுவில்**
**சந்தனம் சாத்தி மகிழ்ந்தனன் போற்றி**

என்று சந்தனம் இடுக. இட்டு, ஓம் மன்னொளி முதலே போற்றி என்று ஓதி மலரிடுக.

**அந்தச் சந்தனம் அழகுற விளங்க**
**சிந்துரக் குங்குமம் சேர்த்தனன் போற்றி**

என்று குங்கும் இடுக. இட்டு,ஓம் மன்னொளி முதலே போற்றி என்று ஓதி மலரிடுக.

**பொதியெனப் பல்வகை மணமலர் தொடுத்து**
**அதியெழில் மாலைகள் அணிதோன் போற்றி**

என்று ஓதி மாலைகள் சாத்துக. சாத்தி ஓம் தனியொளித் தலைவா போற்றி என்று மலர் சொரிக.

பின்னர் அறுகு, வில்வம், மலர்கள், மஞ்சளகிரி ஆகியவற்றை முடிமேல் வைத்து,

**ஓம் மனவுருத் தலைவா போற்றி**
**ஓம் அறிவுருத் தலைவா போற்றி**
**ஓம் சிவவுருத் தலைவா போற்றி**

என்று ஓதுக.

## வழிபாட்டு முறை 32 : மனோன்மணி பூசை

இலிங்கத்தின் ஆவுடையாரில் இலிங்கத்திற்கு இடப்பக்கத்தில் மனோன்மணியைப் பூசிக்க ஓதும் மந்திரங்கள்.

**ஓம் ஆதி அனாதி அகாரணி காரணி**
**சோதிய சோதி சுகர சுந்தரி**
**மாது சமாதி மனோன்மனி மங்கலி**
**ஓதி என் உள்ளத்துடன் இயைந் தாளே**

## வழிபாட்டு முறை 35 : அட்டமூர்த்த விரிவாக்கப் பூசை (பவாதி நாம அர்ச்சனை)

**ஓம் கதிரவன் இயக்க இயவுள் போற்றி**

**ஓம் திங்கள் இயக்க இயவுள் போற்றி**

**ஓம் உயிர்த்தொகை இயக்க இயவுள் போற்றி**

**ஓம் விண்ணியக்க இயவுள் போற்றி**

**ஓம் வளியியக்க இயவுள் போற்றி**

**ஓம் தீயியக்க இயவுள் போற்றி**

**ஓம் புனலியக்க இயவுள் போற்றி**

**ஓம் மண்ணியக்க இயவுள் போற்றி**

இம் மந்திரங்களை ஓதி இலிங்கத்தைச் சுற்றி மலர் சொரிக.

## வழிபாட்டு முறை 33

அனைத்து அலங்காரம் புனைந்த நிலையில் திருவடிநீர், திருவாய் நீர், திருமுடிநீர் அளிக்க. முறைகளுக்கும் மந்திரங்களுக்கும் வ.மு. 30 பார்க்க.

## வழிபாட்டு முறை 34

அமுபடிகளை அருகில் வைத்துக் கொண்டு பார்வைத் தூய்மை, தெளித்தல், தட்டல், திக்குக் கட்டல், காப்புவட்டம் செய்தல் ஆகியவற்றை ஆற்றி ஆனு முத்திரையால் ஓம் சிவாமுதம் பொழிக என்று மலரிட்டு அமுதாக்குக.

## வழிபாட்டு முறை 35 : நறும்புகை சூழ்தல் (தூபம்)

ஊதுவத்தி போன்ற நறும்புகைப் பொருட்களை ஆயத்தப்படுத்தி அதன்மீது,

**ஓம் அவிரொளி இயவுள் போற்றி என்று மலரிடுக.**

உடன்,

**பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி**
**அரும்பொடு மலர்கள் கொண்டாங்கு ஆர்வத்தை உள்ளே வைத்து**
**விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினால் இடவல்லார்க்கு**
**கரும்பினில் கட்டி போல்வார் கடவூர் வீரட்டனாரே.**

என்ற பாடலை ஓதி தூபம் காட்டுக.

**வழிபாட்டு முறை 36 : ஓரொளி காட்டல் (ஏக தீபம்)**

**ஒரு திரி ஏற்றிய விளக்கொளியை ஆயத்தம்செய்து,**

**ஓம் இறை திருகண்ணே போற்றி**

என்று மலரிடுக. உடன்,

**சோதியே சுடரே குழலொளி விளக்கே**
**சுரிசூழற் பனண முலை மடந்தைப்**
**பாதியே பரனே பால்கொள்வெண் நீற்றாய்**
**பங்கயத் தயனும் மால் அறியா**
**நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்**
**நிறைமலர்க் குருந்தமே வியசீர்**
**ஆதியே அடியேன் ஆதரித் தழைத்தால்**
**அதெந்துவே என்றரு ளாயே**

என்ற பாடலை ஓதி ஒளிகாட்டிப் பின் மலரிடுக.

**வழிபாட்டு முறை 37 : அமுதுபடைத்தல் (நைவேத்தியம்)**

ஏற்கெனவே ஆயத்தம் செய்து வைத்த அமுது படிகளைக் கொண்டு அமுது படைக்க. நந்தி முத்திரையால் மலர்களை எடுத்து அமுது படிகளைத் தொட்டு இலிங்கத் திருவாயில் காட்டுக. ஓதும் மந்திரம்: ஓம் சிவாமுதம் ஏற்க

இவ்வாறு ஐந்து முறை ஊட்டி விடுக. பின்னர், திருவாய்நீர் அளிக்க. வ.மு. 30-ல் உரிய மந்திரம் கொடுக்கப்பட்டிருப்பதைக் கண்டு கைக்கொள்க. இதன்பின் திருமுடிநீர் அளிக்க வ.மு 30 ஐப் பார்த்துச் செய்க. பின்னர்

**முற்றா இளந்தளிர் எண்ணிஎடுத்த**

**வெற்றிலை பாக்கு வழங்கினன் போற்றி**

என்று ஓதி வெற்றிலை வாசப்பாக்கு வழங்குக. வெற்றிலை பாக்குடன், ஏலம், கராம்பு, பச்சைக் கற்பூரம், சிறிது சந்தனம், சாதிக்காய் ஆகியவற் றைச் சேர்த்து அளிக்க. உடன் திருவாய் நீர் அளித்து

**வேட்டலி உண்ணும் விரிசடை நந்திக்குக்**

**காட்டவும் நாமிலம் காலையும் மாலையும்**

**ஊட்டவி யாவன உள்ளம் குளிர்விக்கும்**

**பாட்டவி காட்டுதும் பாலவி யாமே.**

என்ற திருமந்திரப் பாடலை ஓதி மலரிடுக.

## வழிபாட்டு முறை 38 : அருச்சனை

இங்கே 16 போற்றி, 108 போற்றி, 308 போற்றி, 1008 போற்றி என்றெல்லாம் நேரம் அனுமதிக்கின்ற அளவில் மேற்கொள்க. பொதுவாக 108 போற்றிகள் என்பது வழக்கில் உள்ளது. அதன் பொருட்டு போற்றித் திருத்தாண்டகம் இங்கே அளிக்கப்படுகிறது.

**வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி**

**மீளாமே ஆளென்னைக் கொண்டாய் போற்றி**

**ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி**

**ஓவாத சத்தத் தொலியே போற்றி**

**ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி**

**ஆறங்கம் நால்வேதம் ஆனாய் போற்றி**

**காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி**

**கயிலை மலையானே போற்றி போற்றி**

**பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி**

**பிறவி யறுக்கும் பிரானே போற்றி**

**வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி**

**மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி**

**பொய்ச்சார் புரமூன்றும் எய்தாய் போற்றி**

**போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி**

**கச்சாக நாக மசைத்தாய் போற்றி**

**கயிலை மலையானே போற்றி போற்றி**

**வானத்தார் போற்றும் மருந்தே போற்றி**

**வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி**

**ஊனத்தை நீக்கும் உடலே போற்றி**

**ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி**

தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்குத் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ யாடல் உகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி எங்கும் பரந்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வார் ஒருவரையும் இல்லாய் போற்றி
காராகி நின்ற முகியே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவ ரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி உலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்தும்சொல் லானாய்ப் போற்றி
என்சிந்தை நீங்கா இறவைா போற்றி
விண்ணும் நிலனுந்தீ யானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
இமையா துயிரா திருந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாகம் ஆகத் தணைத்தாய் போற்றி
ஊழி ஏழான ஒருவா போற்றி

அமையா வருநஞ்சம் ஆர்த்தாய் போற்றி
ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர்தொழுந் தேவே போற்றி
சென்றேறி எங்கும் பரந்தாய் போற்றி
ஆவாத அடியேனுக் கெல்லாம் போற்றி
அல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
நெடிய விசும்பொடு கண்ணே போற்றி
நீள அகல முடையாய் போற்றி
அடியும் முடியும் இகலி போற்றி
அங்கென் றறியாமை நின்றாய் போற்றி
கொடியவன் கூற்றம் உதைத்தாய் போற்றி
கோயிலா என்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய உருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி
ஓதாதே வேதம் உணர்ந்தாய் போற்றி
எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி
பண்ணா ரிசையின் சொற் கேட்டாய் போற்றி
பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

**முடிவில் எண் மலர் சாத்துக.**

1) கொல்லா நோன்பருளும் கூத்தா போற்றி
2) ஐந்தடக்கும் ஆற்றல் அருள்வாய் போற்றி
3) பொறையுடைமை கைக்கொளச்செய் புலமையோய் போற்றி
4) அருள்வழியே நடப்பிக்கும் அன்பே போற்றி
5) அறிவுருவாய் ஆக்குவிக்கும் அண்ணால் போற்றி
6) வாய்மைநெறி நிற்பிக்கும் வள்ளால் போற்றி
7) தவநெறியே சார்விக்கும் தக்கோய் போற்றி
8) அன்புநெறி ஒழுகச் செய் இன்பே போற்றி.

## வழிபாட்டு முறை 39 : ஒளிவரிசை வழிபாடு (தீபாராதனை)

### ஒளி வரிசைகள் வருமாறு

1. ஒற்றைத் தீபம்
2. நட்சத்திர தீபம்
3. ஐம்முகத்தட்டுத் தீபம்
4. நாக தீபம்
5. புருடாமிருக தீபம்
6. ரிஷப தீபம்
7. யானைத் தீபம்
8. புலித் தீபம்
9. குதிரைத் தீபம்
10. சிங்கத் தீபம்
11. அன்னப்பறவைத் தீபம்
12. கோழித் தீபம்
13. ஆலயத் தீபம்
14. மேரு தீபம்
15. சக்தி தீபம்




16. கும்ப தீபம்

இவற்றை எல்லாம் செய்யும் போது **ஓம் சிவாயநம** என்று அர்ச் சித்துச் செய்க. இவையனைத்தும் செய்ய இயலாத போது ஒற்றைத் தீபம் மட்டும் காட்டி அமையலாம். ஏனயைவற்றை மானதமாகக் கூறி மலரிடலாம்.

ஓம் விண்மின் ஒளி நிகழ்க போற்றி என்றால் நட்சத்திர தீபம் காட்டிய தாகும். இப்படியே எல்லா தீபங்களையும் பாவனையால் காட்டி மலரிடலாம்.

### வழிபாட்டு முறை 40 : ஐம்பணிவிடைகள் (பஞ்சோப சாரம்)

கண்ணாடி, குடை, சாமரம, கொடி, விசிறி ஆகியவை ஐந்து உபசாரங்கள் எனப்படும். இவற்றைக் காட்டும் போது ஓம்சிவாய நம என்ற மந்திரத்தை ஓதி மலரிட்டு எடுத்துச் செய்க. இவை இல்லாத போது இவற்றை மானத பாவனையால் நிகழ்த்துக. முறை வ.ம 40-ல் கூறியதே.

### வழிபாட்டு முறை 41 : புனிதக் கையுறை (பவித்ர சமர்ப்பணம்)

வில்வம், அறுகு, மலர்கள், மஞ்சளரிசி ஆகியவற்றை இலிங்கத் தின் மீது வைத்து ஓம்சிவாய நம என்று ஓதுக.

### வழிபாட்டு முறை 42 : கற்பூரப் பேரொளி காட்டல் (ஆராத்திரிகம்)

ஐங்கலை என்ற கற்பூர கலையில் ஐந்து கற்பூரங்களை ஏற்றி, ஓம்சிவாய நம என்று மலரால் அர்ச்சிக்க, உடன்,

**கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி**
**அற்புதக் கோலம் நீடி அருமறை சிரத்தின் மேலாம்**
**சிற்பர வியோம மாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று**
**பொற்புடன் நடம்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி.**

என்ற பாடலை ஓதி முதலில் இதனை வட்டமாகவும், பிறகு சிரசு, வலக்கண், இடக்கண், நெற்றிக்கண், இதயம், நாபி, வலது இடது திருவடி களை இலிங்கத்தில் கற்பித்துக் காட்டி, இறுதியில் ஓங்காரவடிவமாகச் சுற்றி தலை உச்சியில் நிறுத்தி" கொணர்க.

உடன் விபூதியை எடுத்து கற்பூரப் பேரொளியில் சுற்றி எடுத்து இறைவன் முன் ஓங்காரம் காட்டி இறைவனது நெற்றியில் நீறிட்டதாகப் பாவித்து அங்கிருந்து நேரே பூசகர் தம் தலை உச்சியில் அந்த விபூதியைக் காட்டி நாபிக்கு அடியில் உள்ள குண்டலியில் அதைக் கொண்டு சேர்த்தாகக்

காட்டி விபூதிப் பெட்டகத்தில் சேர்க்க. சேர்த்து அந்த வழிபாட்டுப் பலன் அடங்கிய விபூதியை தனது நெற்றியில் அணிக. இதை மிகச் சுருக்க மாக சம்பந்தர் ஒளி நீறு அணிந்து என் உளமே புகுந்த அதனால் என்று கூறியது கூர்ந்து கவனித்து போற்றி மேற்கொள்ளத்தக்கது.

### வழிபாட்டு முறை 43 : மலர் சொரிதல் (புஷ்பாஞ்சலி)

இரண்டு கைகளிலும் மலர் எடுத்து தலை உச்சியில் கைகளைக் கூப்பிக்கொண்டு ஓம் எல்லா உலகமும் ஆனாய் போற்றி என்று மலர் சொரிக.

### வழிபாட்டு முறை 44 : மந்திர உருத்திரள் அளித்தல் (ஜெபசமர்ப்பணம்)

அக்கமாலையை எடுத்துக் கண்களில் ஒற்றிக்கொண்டு, ஒவ்வொரு மணியாக உருட்டி, 108 முறை ஓம் சிவாயநம என்று உருவேற்றி இறை வனுக்குக் காணிக்கை செய்க.

### வழிபாட்டு முறை 45 : பிழை பொறுக்க வேண்டல்

**எல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி**
**நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின்அஞ் செழுத்தைச்**
**சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப் பிழையும்**
**எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய் கச்சி ஏகம்பனே**

என்று ஓதி மலரிடுக.

### வழிபாட்டு முறை 46 : பூசைப் பலனை ஒப்படைத்தல் (கன்மசமர்ப்பணம்)

**அன்றே என்றன் ஆவியும் உடமையும் எல்லாமும்**
**குன்றே அணையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ**
**இன்றோர் இடையூறு எனக் குண்டோ எண்டோள் முக்கண் எம்மானே**
**நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே.**

என்று பாடி நந்தி முத்திரையால் மலர் எடுத்து இதயத்தைத் தொட்டு இறைவனது பாதத்தில் வைக்க.

## வழிபாட்டு முறை 47 : புறத்துப் பரமனை அகத் தொடுக்கல்

ஒரு முறை எட்டங்கங்களும் நிலம் தோய விழுந்து வணங்கி எழுந்து, நந்தி முத்திரையால் மலர்களை எடுத்து இலிங்கத்தைச் சுற்றிக் காட்டி இதயத்தில் வைத்து,

**கரவாடும் வன்னெஞ்சர்க்கு அரியானைக் கரவார்பால்**
**விரவாடும் பெருமானை விடையேறும் வித்தகனை**
**அரவாடச் சடைதாழ அங்கையினில் அனலேந்தி**
**இரவாடும் பெருமானை என்மனத்தே வைத்தேனே**
**என்று ஓதி அந்த மலர்களை பூசகர் தன்மீது சொரிந்து கொள்க.**

## வழிபாட்டு முறை 48 : பூசை நிறைவு

**பண்ணிய பூசை நிறைந்தது சிற்றம்பல நடங்கண்டு**
**எண்ணிய எண்ணம் பலித்தன மெய்யின்பம் எய்தியதோர்**
**தண்ணியல் ஆரமுது உண்டனன் கண்டனன் சாமியை நான்**
**நண்ணிய புண்ணியம் என்னுரைக்கேன் இந்த நானிலத்தே**

என்று ஓதுக.

## வழிபாட்டு முறை 49 : வடகிழக்கில் சண்டீசருக்கு ஆதனம் கற்பித்து,

**ஓம் ஆ:ம் சண்டீசர் ஆதனமே எழுக**
**ஓம் ஆ:ம் சண்டீசரே போற்றி**
**ஓம் ஆ:ம் ஒலிச் சண்டீசரே கடிதெழுக**

இறைவனுக்கு அமைத்த பூசைப் பொருட்களை சிறி தெடுத்து சண்டீசருக்குப் படைக்க.

அவருக்குத் திருமுடி நீர் அளிக்க. நறும்புகை, ஒளி, கற்பூரப் போராளி ஆகியவற்றைக் காட்டி,

**ஆமலி பாலும் நெய்யும் ஆட்டி அர்ச்சனைகள் செய்து**
**பூமலி கொன்றை சூட்ட பொறாத தன் தாதை தாளைக்**
**கூர்மழு ஒன்றால் ஒச்சக் குளிர்சடை கொன்றை மாலைத்**
**தாமம் நற்சண்டிக் கீந்தார் சாய்க்காடு மேவி னாரே.**

என்று ஓதுக.

## வழிபாட்டு முறை 50 : வாழ்த்து

**வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்**
**கோன் முறை அரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க**
**நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் கேள்வி மல்க**
**மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகம் எல்லாம்**

என்று ஓதி,

**தென்னாடுடைய சிவனே போற்றி**
**எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி**

என்று முழங்கி முடிக்க.

**சுத்த சிவபூசை முற்றியது.**

# அம்மா இறந்தபின் செய்ய வேண்டியவை

பூமியில் பிறந்த , உருவாகிய அனைத்து தூல உடம்புகளும் அழிவது திண்ணம். இதே போல் தான் எங்கள் தாய்மார்களும் என்றோ ஒருநாள் ஆகுதி யாகப் போகிறார்கள் என்பது முடிந்த முடிபு. தாயின் இறப்பு தாங்கமுடியாது தான் அதற்காக அழுது புலம்பி நேரத்தினை வீணடிக்காமல் ஆகவேண்டிய கருமங் களை சிறப்பாகப் பார்க்கவேண்டும். அவரின் எண்ணங்கள், ஆசைகளை இயன் றளவாகினும் நிறைவேற்றுதல் உங்களுக்கு மன அமைதியை கொடுப்பதுடன் அவரின் ஆத்ம சாந்திக்கும் ஆதரவளிக்கும்.

**அம்மா இறந்தபின் பின்வருவனவற்றினை செய்யலாம்**

01. அவரின் விருப்பப்படி இறப்புக் கிரிகைகளை அவர் விரும்பிய இடத்தில் சிறப்பாகச் செய்யலாம். (இறக்க முன்னரே இவற்றினை கேட்டுக்கொள்வது இருவருக்கும் திருப்தியளிக்கும்)
02. மற்றைய கிரிகைகளான காடாத்து, எரி நீற்றினை கடலில் அல்லது கங்கையில் கரைத்தல் போன்றவற்றினை சிறப்பாக ஆகம அல்லது ஊர் வழக்கின்படி செய்தல்.
03. செலவு எனப்படும் அவியல் படையல் போன்ற விருப்பியவற்றினை உவந் தளிக்கும் நிகழ்வினை சிறப்பாக செய்தல்.

04. துடக்குக் கழித்தல், அந்தியேட்டி போன்ற காரியங்களை சிறப்பாக செய்து வருபவர்களுக்கு மட்டுமல்லாமல் உணவில்லாதவர்களுக்கும் இயன்றளவு உணவளித்தல் அம்மாவின் ஆத்மாவை திருப்தியடையச் செய்யும்.

05. அம்மாவின் நினைவாக அந்தியேட்டியை ஒட்டி நினைவு மலர் வெளியிடும் போது பின்வருவனவற்றினைக் கருத்தில் கொள்ளலாம். சமய வழிபாடு கள், திருமுறைகள், வழக்கொளிந்து செல்லும் எமது சமய பண்டிகைக் குறிப்புக்கள் மற்றும் சம்பிரதாயங்களும் சடங்குகளும், பழங்காலப் புத்தகத்தின் மீள்பதிப்பு (முழுமையாகவோ / பகுதியாகவோ அனுமதி யுடன்) , அம்மாவின் வாழ்க்கை வரலாறு (அவர் இருக்கும்போதே அவரிடம் கேட்டு எழுதிக்கொள்ளுங்கள்), உங்கள் குடும்ப மரம் ( அடி / பரம்பரை) , கோவில் வரலாறுகள், பழமொழிகள் போன்ற வழிபட்டு மற்றும் ஆவணப் படுத்த படவேண்டிய விடயங்களை அச்சுபதிவு செய்து வெளியிடுங்கள். இவை நூறு இடங்களில் பரந்து சென்று எங்கோ ஒருபிரதியாவது இன்னும் நூறு, ஆயிரம் ஆண்டுகள் இருக்க வேண்டும் என்று எமது முன்னோர் உருவாக்கிய விடயம் இது.

06. ஆண்டுத் துவசம், சித்திரைப் பௌர்ணமி விரதம் , மகாளய அமாவாசை விரதம் போன்றவற்றினை தவறாது செய்யவும்.

07. அம்மா நினைவாக ஆலயம் அல்லது சிவலிங்கம் அமைத்தல், அறநெறி பாடசாலைகள் அமைத்தல், கல்வி வளர்ச்சிக்கு உதவுதல், உணவளித் தல் போன்ற உங்களால் இயன்ற சிவ காரியங்களோ, அறக்காரியங்களோ செய்யுங்கள்.

08. இயலுமானவர்கள் காசி, கயா, திரிவேணி சங்கமம் (அலகாபாத்), இராமேச் சுவரம் போன்ற பித்ருக்களுக்கான விசேட தலங்களுக்கு சென்று பித்துரு பூசைகளைச் செய்யுங்கள். இளவயதில் செல்லக்கூடாதது என்று ஒரு சாத்திரங்களும் சொல்லவில்லை மற்றும் சிவனைப் பார்ப்பதற்கு கலங் கவும் தேவையில்லை. அதுபோல் ஈழத்தில் கீரிமலை தீர்த்தகரையிலும் செய்யலாம்.

09. முக்கியமாக இவையனைத்திலும் உங்கள் பிள்ளைகளை ஈடுபடுத்திக் கொள்ளுங்கள். ஒன்று சமயம் சம்பிரதாயம் மற்றது பின்னடிக்கு உங்கள் பிதிர்களுக்கு அவர்களை செய்யத்தூண்டும்.

மகாளய பட்சம் என்பது புரட்டாசி மாதம் பவுர்ணமிக்கு மறுநாள், பிரதமை திதியில் தொடங்கி, புரட்டாசி மாதம் அமாவாசை வரை நீடிக்கும். புரட்டாசி மாதத்தில் வரும் அமாவாசையே மகாளய அமாவாசை எனப்படும். மறைந்த எம் முன்னோர் பித்ரு உலகிலிருந்து இந்தப் பதினைந்து நாட்கள் (பட்சம்) தாங்கள்

விரும்பிய இடங்களுக்கு சென்றுவர எமதர்மன் அனுமதிப்பாராம். அந்த நாட்களில் அவர்கள் தங்களுக்கு விரும்பியவர்களிடம் செல்வார்கள். ஆகவே இந்தக் காலங்களில் அளிக்கப்படும் பித்ரு தர்ப்பணத்தால் உங்கள் தோசங்கள் நீங்கி அவர்களின் அருளாசியைப் பெறுவீர்கள்.

**யதுர் வேதத்தில் குறிப்பிட்ட மகாளய பட்சத்தின் ஒவ்வொரு திதியிலும் தர்ப்பணம் கொடுப்பதன் பலன்கள்** (குறிப்புகள் - மயூரா அகிலன்)

**முதல்நாள் - பிரதமை** - பணம் சேரும், **இரண்டாம் நாள் - துதியை** - ஒழுக்கமான குழந்தைகள் பிறத்தல், **மூன்றாம் நாள் - திருதியை** - நினைத்தது நிறைவேறுதல், **நான்காம் நாள் - சதுர்த்தி** - பகைவர்களிடமிருந்து தப்பித்தல், **ஐந்தாம் நாள் - பஞ்சமி** - செல்வம் சேரும் நியாயமான சொத்துகள் கிடைக்கும், **ஆறாம் நாள் - சஷ்டி** - புகழ் கிடைத்தல் , **ஏழாம் நாள் - சப்தமி** - சிறந்த பதவிகளை அடைதல் , **எட்டாம் நாள் - அஷ்டமி** - சமயோசித புத்தி, அறிவாற்றல் கிடைத்தல், **ஒன்பதாம் நாள் நவமி** - திருமண தடை நீங்கும், **பத்தாம் நாள் - தசமி** - நீண்ட நாள் ஆசை நிறைவேறுதல், **பதினொன்றாம் நாள் - ஏகாதசி** - படிப்பு, விளையாட்டு, கலையில் வளர்ச்சி , **பன்னிரெண்டாம் நாள் - துவாதசி** - தங்கநகை சேர்தல், **பதின்மூன்றாம் நாள் - திரயோதசி** - பசுக்கள், விவசாய அபிவிருத்தி, தீர்க்காயுள், ஆரோக்கியம், **பதினான்காம் நாள் - சதுர்த்தசி** - ஆயுள் விருத்தியாகும், பாவம் நீங்குதல், எதிர்கால தலைமுறைக்கு நன்மை , **பதினைந்தாம் நாள் - மகாளய அமாவாசை** - முன் சொன்ன அத்தனை பலன்களும் நம்மைச் சேர முன்னோர் ஆசி வழங்குதல்.

நன்றி - சுபம்

**மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்**

பிள்ளைகள்

**பார்த்தீபன், பிரதீபன், தர்ஷிகா**

# நன்றி பகிர்வதில் நிறைவடைகின்றோம்

**ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்**
**பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்**
**சூரையங்காட்டிடைக் கொண்டு போய்ச் சுட்டிட்டு**
**நீரினில் மூழ்கி நினைப் பொழிந்தார்களே - திருமந்திரம் 144**

யாக்கை நிலையாமை என்பதற்கு இணங்க பூமியில் பிறந்தவர்கள் அனைவரும் இறப்பது நியதி, அந்த வகையில் எமது தாயார் திருமதி. சிவநேசரத்தினம் குணரத்தினம் அவர்களின் மறைவினை அறிந்ததும் எமக்கு ஆறுதல் வழங்கியோர், சரீர உதவிகளை நல்கியோர், உணவு வழங்கியோர், பிரசுரங்கள் மற்றும் செய்தி ஓலைகளை அச்சுப்பதித்து வெளியிட்டோர், இறுதிக் கிரியைகளில் பங்கு பற்றியோர், அம்மாவின் சரீரத்தினை அவரின் வேண்டு கோளின்படி எங்கள் வீட்டில் இருந்து கொக்குவில் மயானம் வரை தோளில் சுமந்தோர், தெருவழியில் அவரின் பாடை சுமப்பதற்கு வெள்ளை விரித்தோர், மறுநாள் காடாத்து நிகழ்வில் கலந்து கொண்டோர், மலர்வளையங்கள் வழங்கியோர் அனைவருக்கும் எமது மனமார்ந்த தலை சாய்ந்த நன்றிகள்.

அத்துடன் முகப்புத்தகம், சமூக வலைத்தளங்கள், குறுஞ்செய்தி, தொலை பேசியூடாக இரங்கல் செய்திகளைப் பரிமாறிய அனைத்து உள்ளங்களுக்கும் எமது கோடி நன்றிகள். அத்துடன் அம்மாவினை இறுதிவரை ஒரு குறையு மில்லாமல் பார்த்துக் கொண்ட ஜஷீலா மற்றும் தாதிமார்களுக்கும் மனமார்ந்த நன்றிகள். உறவுகள் பிரியும் போது தான் உறவுகளின் மதிப்பு புரியும், புது உறவுகள் பிறக்கும் என்பதை உறுதிப்படுத்தியுள்ளீர்கள்.

தாயின் பிரிவு என்பது சில நாட்களில் மாறும் அல்லது மறக்கும் விடயமல்ல. உங்களின் மனங்களிலும், உங்கள் தொடர்புகளிலும், உங்களது சிந்தனை மற்றும் ஞாபகங்களிலும், உங்களோடு நாம் பேசும் வார்த்தைகளிலும், மேலாக சிவப்பரம் பொருளின் பாதார விந்தங்களிலும் எங்கள் அம்மாவினை எப்போதும் காண்போம் என்ற மனவைராக்கியத்துடன் மீண்டும் நன்றிகள் கூறுவதில் சிவநேசரத்தினம் குணரத்தினம் குடும்பத்தினராகிய நாங்கள் நிறைவடை கின்றோம்.

**மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்.**

**பார்த்தீபன், பிரதீபன், தர்ஷிகா** மற்றும் ஆ.சி.பழனிவேல், சகோதரர்கள், மருமக்கள், பேரப்பிள்ளைகள்

# உத்தரகோசமங்கை - இப்பிறப்பில் பார்க்கவேண்டிய தலம்

உலகிலேயே முதன் முதலில் தோன்றிய கோவில் என போற்றி புகழப்படும் சிவபெருமான் வீற்றிருக்கும் புனித தலங்களில் ஒன்று உத்திரகோசமங்கை

(இராமேச்சுவரம் செல்லும் வழியில் இராமநாதபுர மாவட்டத்தில் உள்ளது)



திருவாரூரில் பிறந்தால் முக்தி
காசியில் இறந்தால் முக்தி
அண்ணாமலையை நினைத்தால் முக்தி
உத்தரகோசமங்கை மண்ணை மிதித்தால் முக்தி

# அண்ணாமலை கிரிவலம் புரிவதால் ஏற்படும் நன்மைகள்

தொகுப்பு: சி.வெற்றிவேல், இன்ஃபோகிராஃபிக்ஸ்: எம்.மகேஷ்

**சித்திரை**
தான, தர்மங்கள் செய்த பலன்கள் கிடைக்கும்.

**வைகாசி**
செய்த பாவங்கள் தொலையும்.

**ஆனி**
உடல் ஆரோக்கியம் மேம்படும்

**ஆடி**
உடற்பிணி, உள்ளப் பிணி விலகும்.

**ஆவணி**
நன்மைகள் ஏற்படும்

**புரட்டாசி**
நினைத்த காரியங்கள் நிறைவேறும்

**ஐப்பசி**
பட்டம், பதவி, புகழ், கீர்த்தி வந்தடையும்.

**கார்த்திகை**
அளவிட முடியாத சுக போகங்கள் கிட்டும்.

**மார்கழி**
பதினாறு பேறும் பெற்று பெரு வாழ்வு கிட்டும்.

**தை**
பாவங்கள், தீவினைகள் நீங்கி நற்பயன்கள் கிட்டும்

**மாசி**
செல்வம் பெருகும்

**பங்குனி**
ஞானம் கிட்டும்.





**சிவராத்திரி, தீபாவளி, கார்த்திகை தீபத் திருநாள்**
கோடி மடங்கு அதிகப் பலனைப் பெறுவர்.

**பவுர்ணமி**
பக்தர்களின் துயரங்கள் விலகும்.

நன்றி : விகடன்